# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.



இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016

**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.

TS McCann/NESTUM/1492 TM

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனபின் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைக்கு தானிய உணவும் கொடுங்கள்



• பம்பாய் வெடிகுண்டு விபத்து...



• யாகூப்

# யார் இந்த யாகூப்?

பம்பாய் வெடிகுண்டு சதி வழக்கில் பிரதான குற்றவாளிகளுள் ஒருவரான இப்ராஹிம் என்கிற முஷ்டாக் என்கிற புலி என்பவரின் சகோதரர்தான் சமீபத்தில் சி.பி.ஐ.யிடம் பிடிபட்டிருக்கும் யாகூப் மேமோன். மேமோன் குடும்பத்தைச் சேர்ந்த இவர்களைப் பற்றி ஏகப்பட்ட பின்னணித் தகவல்களைக் கண்டு பிடித்துள்ளது சி.பி.ஐ.

பம்பாயின் மாஹிம் போலிஸ் ஸ்டேஷன் அருகில் உள்ள ஒரு பழைய அடுக்கு மாடிக் கட்டடத்தின் பெயர் அல் ஹுஸைன். இந்த ஏழு மாடிக் கட்டடத்தின், வெற்றிலைப் பாக்குக்கறை படிந்த படிகளைக் கடந்து போனால், ஐந்தாம் மற்றும் ஆறாவது மாடிகளில் கூட்டுக் குடும்பமாக வசித்து வருவது தான் மேமோன் குடும்பம். குடும்பத்தின் தலைவர் அப்துல் ரஸாக் (65). ரஸாக்-ஹனிஃபா தம்பதிகளுக்கு ஆரிஃப், இப்ராஹிம், யாகூப், அயூப், அனிஸ், யூஸுஃப் என்று ஆறு பிள்ளைகள்.

டெல்லியில் பிடிபட்ட யாகூப், ஒரு சார்ட்டர்ட் அக்கவுண்டன்ட். ஆறு வருடங்களுக்கு முன்பு, தன் நண்பர் ஒருவருடன் கூட்டாய் பிராக்டிஸ் செய்யத் தொடங்கினான். தவிர, யாகூப்புக்கு மாமிச ஏற்றுமதி பிசினசும் உண்டு.

ஆனால், யாகூப் 65ல் பாகிஸ்தானில் பிறந்ததாகவும், கராச்சியில் பள்ளிக்கூடப் படிப்பு முடித்ததாகவும் போலியான தஸ்தாவேஜுகளைத் தயாரித்துத் தந்தது பாகிஸ்தான். தவிர, இவனுக்கு யூசுப் அகமது என்று புதிய பெயரும் சூட்டி, இந்தியாவுக்கு எதிரான தன் சதியில் பயன்படுத்திக் கொண்டிருப்பது அண்மையில் வெளிப்பட்டது.

மூன்று வருடங்களுக்கு முன்பு, யாகூப்புக்கும், அவனது சகோதரன் அயூப்புக்கும் பம்பாயின் வெகு பிரபலமான கிளப் ஒன்றில் மிகவும் ஆடம்பரமான விதத்தில் ஒரே சமயத்தில் திருமணங்கள் நடைபெற்றன. அந்தத் திருமணங்களின் போது எடுக்கப்பட்ட வீடியோ மற்றும் புகைப்படங்கள் சி.பி.ஐ. வசம் சிக்கிக் கொண்டன. இவை வெடிகுண்டு சதியைத் துப்புத் துலக்குவதில் சி.பி.ஐ.க்குப் பெரிதும் உதவியாய் இருந்தன.

வெடிகுண்டு சதியை நிறைவேற்ற பாகிஸ்தானால் பேரம் முடிக்கப்பட்ட தொகை ரூ.20 கோடி என்கிறது சி.பி.ஐ.

- மௌஷ்மி



பெருமாள் பெயரால் ஒரு பகல் கொள்ளை!

# நஷ்டஈடு

ஐயா, தங்கள் 17.7.94 இதழில் "பெருமாள் பெயரால் ஒரு பகல்-கொள்ளை" என்ற கட்டுரை படித்து ஆச்சர்யம் அடைந்தோம். அதில் விவரிக்கப்பட்டுள்ள விஷயங்கள் அத்தனையையும் மறுக்க விரும்புகிறோம். திரு. ஈசுவரமுத்து, பார்த்தசாரதி சுவாமி தேவஸ்தானத்தில் நிர்வாக அதிகாரி(EO) மட்டுமல்ல, இந்து அறநிலைய இலாகாவின் துணை ஆணையரும் ஆவார்.

பார்த்தசாரதி சுவாமி கோயிலில் சில பணிகள் அறநிலைய இலாகாவின் ஒப்புதலோடும் வேறு சில, ஒப்புதலை எதிர்பார்த்தும் நிறைவேற்றப்பட்டன. ஆனால் எல்லா பணிகளுமே நன்கொடையாளரின் நேரடி மேற்பார்வையில் நடந்தது. இதற்கு அனுமதி பெறப்பட்டது. இந்தப் பணிகளுக்கான பணத்தை அவர்கள் காண்டிராக்டர்களுக்கு நேரடியாக வழங்க, அவை கோயிலுக்கு நன்கொடையாகக் கருதப்பட்டு வருமான வரி விலக்குச் சான்றிதழ்கள் அளிக்கப்பட்டன. இவை தவிர செக் அல்லது டிராஃப்ட் மூலம் கிடைத்த நன்கொடைகளுக்கு ரசீதுகள் வழங்கப்பட்டு அரசு வங்கிகளில் டெபாசிட் செய்யப் பட்டன. 15.6.94 முதல் 19.6.94 வரை எல்லா சந்நிதிகளிலும் சம்புரோக்ஷணம் நடந்தது. இவற்றுக்கும் பொது மக்கள் உதவியுள்ளார்கள். யாக சாலை செலவுகளைச் சிலர், வேதபாராயணச் செலவுகளைச் சிலர் என்று இப்படி பல்வேறு செலவுகளை நன்கொடையாளர்கள் பகிர்ந்து கொண்டனர். ஆக மொத்தம், பெரும் பாலான செலவுகள் நன்கொடையாளர் களால் நேரிடையாகப் பட்டுவாடா செய்யப்பட்டன. நிர்வாக அதிகாரி(EO) மேற்பார்வையிட்டதுடன் சரி. ஆகவே நீங்கள் பெருந்தவறுகள் நடந்திருப்பதாகப் பட்டியலிட்டிருப்பவை எல்லாம் தவறான செய்திகள்.

மேலும், ஈசுவரமுத்து பேட்டியில் அவர் வார்த்தைகளைத் திரித்து எழுதியிருக்கிறீர்கள். நன்கொடை யாளர்கள் நற்பணிகளுக்கு நேரடியாக உதவினார்கள், தமது கரங்கள் சுத்த மானவை, நன்கொடைகளுக்கு ரசீது வழங்கப்பட்டன என்பன தவிர மற்றவை யெல்லாம் உண்மைக்குப் புறம்பானவை. தவிர உயர் அதிகாரிகளுக்கு விஷயம் தெரியப்படுத்தப் பட்டதாகவும், அவர்கள் தங்களுக்கும் புகார்கள் வந்திருக்கின்றன என்று கூறியதாகவும் எழுதப்பட்டுள்ளது சரியல்ல.

ஈசுவரமுத்துவுக்கும் இளையராஜாவின் அன்னதானத்துக்கும் எவ்வித சம்பந்தமும் கிடையாது. இளையராஜா ஈசுவரமுத்துவிடம் எந்தத் தொகையும் தரவில்லை. இவர் எந்த

ரசீதும் வழங்கவுமில்லை.

பார்த்தசாரதி கோயிலில் இரண்டு தேர்கள் உண்டு. ஒன்று சிறியது. மற்றொன்று பெரியது. இரண்டுமே பழுதுபட்ட நிலையில் இருந்தன. இப்போது இரண்டும் பழுதுபார்க்கப் பட்டு, இயங்கும் நிலையில் உள்ளன. இவையும் நன்கொடையாளர்களின் நேரடி திருப்பணிகளே. ஆக 1,20,000 சேகரிக்கப்பட்டு, அது என்ன ஆயிற்று என்று தெரியவில்லை என்ற உங்கள் கருத்து முற்றிலும் உண்மைக்குப் புறம்பானது.

குளத்தினருகே உள்ள ஆஞ்சனேயர் சந்நிதி, தியணைப்புப் படை உதவியுடன் சுத்தப்படுத்தப்பட்டது. ஆனால் இதில் வண்ணச் சித்திரங்கள் தீட்ட ஒன்பது மாத காலம் ஆகும். சம்புரோக்ஷணத்துக்கு முன் அதைச் செய்ய முடியவில்லை.

நீங்கள் எழுதியிருப்பதையெல்லாம் பார்த்தால், நன்கொடையாளருக்கு ரசீது தரப்படவில்லை என்றும் நன்கொடைகள் சரியான விதத்தில் பயன்படுத்தப்பட வில்லை என்றும் ஓர் எண்ணத்தை உருவாக்குகிறது. இவையெல்லாம் ஈசுவரமுத்து மீது அவதூறு சுமத்துவதாகவும், பொது மக்கள் முன் அவர் அந்தஸ்த்தைக் குறைப்பதாகவும் உள்ளன. எனவே இந்த மறுப்பைப் பிரசுரித்து, ஈசுவரமுத்துவிடம் மன்னிப்புக் கோரவில்லை எனில் உங்கள் மீது ரூ.ஐந்து லட்சத்துக்கு மான நஷ்ட வழக்கு தொடரப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

# ரூ.5,00,000!

-என்.எஸ்.வரதாசாரி
அட்வொகேட்
சென்னை - 28.

பார்த்தசாரதி கோயில் திருப்பணியின் போது பல ஒழுங்கீனங்கள் நடந்திருப்பதாக நமக்குச் சில கடிதங்கள் வந்தன. நேரிலும் சிலர் சொன்னார்கள். ஒரு கோயில் என்பது பொதுச் சொத்து. அதன் நிர்வாகத்தில் தவறுகள் நேர்ந்திருந்தால் மக்கள் சார்பில் தட்டிக் கேட்கும் கடமை பத்திரிகைகளுக்கு உண்டு. 'தீர விசாரித்து அறிவதே மெய்' என்ற முறையில் பலரையும் பேட்டி கண்டபோது, திருவல்லிக்கேணி வாசிகள் பலரும் நொந்து போயிருப்பதை உணர முடிந்தது. அவர்களில் சிலரது கருத்துக்களை வைத்துக் கட்டுரை எழுதினோம். கட்டுரையில் ஓரிடத்தில் கூட ஒழுங்கீனங்களுக்கு ஈசுவரமுத்துதான் காரணம் என்பதாக நாம் குறிப்பிடவில்லை என்பது கவனத்துக்குரியது. ஆயின், தவறுகள் நடந்திருந்தால் அதற்கு நிர்வாக அதிகாரிதான் பொறுப்பு ஏற்க வேண்டும் என்பதால் அவரையும் பேட்டி கண்டு பொது மக்கள் பலர் வெளியிட்ட கருத்துக்களையும் சந்தேகங்களையும் முன் வைத்தோம். அவரும் பேட்டியின் போது தவறுகள் ஏதும் நடக்கவில்லை என்று மறுத்துவிட, அவரது சொற்களே பிரசுரமாகியுள்ளன.

ஈசுவரமுத்து மீது பழி சுமத்துவது போல் கட்டுரையின் தொனி அமைந்திருந்தால் அதற்காக வருந்துகிறோம். ஒரு தனி நபர் மீது பழி சுமத்துவது கட்டுரையின் நோக்கமல்ல. தவறுகள் நடந்திருப்பதாகப் பலர் கருதுகிறார்கள் என்பதை எடுத்துக்காட்டுவதே நோக்கம். தவறுகள் எதுவுமே நடக்கவில்லை; எல்லாமே சரியாகத்தான் நடந்துள்ளன என்பது உண்மையானால் எங்களைவிடவும் அதிகமாக மகிழக் கூடியவர் பார்த்தசாரதி பெருமாளாகத்தான் இருக்க முடியும். மாயக் கண்ணனுக்குத் தெரியாததா!

— நிர்வாக ஆசிரியர்

**‘மௌனராகம்’** படம் பார்த்திருப்பீர்கள். உற்காகப் பெண் திவ்யா, சட்டென்று தன் கல்லூரி நாட்களை உதறி, பெண் பார்க்கும் படலத்தில் சிக்கி, விருப்ப மில்லாத் திருமண வாழ்க்கையில் விழுந்து, சோகராகம் இசைக்கும் காட்சிகளில் ஏரான ‘உச்சு’க் கொட்டியிருப்பீர்கள்.

திவ்யாவுக்கு மட்டுமல்ல, இன்றையப் பெண்கள் பலருக்கும் இந்தப் படலம் ஒரு ‘ஸ்லிப்’ ஆகி விடுவது சாத்தியமே.

முன்பின் அறிமுகமில்லாத ஒருவன் திடீரெனப் பெண் பார்க்க வந்து, டிபன்-காபி சாப்பிட்டு, பேரம் பேசி, பிடித்திருக்கிறது- இல்லை என்று ஒற்றை வரியில் ‘ரிமார்க்’ தந்து.... மிக அதிகமான இல்லங்களில் பஜ்ஜி சொஜ்ஜி சாப்பிட்டதாக ‘கின்னஸ் ரிக்கார்ட்’ ஏற்பட்டாலும் வியப்பதற்கில்லை!

பெரும்பாலான பெண்களுக்கு, வாழ்க்கைத் துணையைத் தேடிக் கொள்வதில் ‘சாய்ஸ்’ இல்லாமலேயே போய்விடுகிறது.

தவிரவும் பெண் பார்க்க வருகிற கும்பலின் காலில் விழுவது, பாட்டுப் பாடுவது போன்ற போன நூற்றாண்டுச் சம்பிரதாயங்கள் இன்னும் தொடர்வது, அருவருப்பான காரியம் என்று நினைக்கும் அளவுக்குப் பெண்கள் மாறியிருக்கிறார்கள். “நாங்கள் என்ன சந்தையில் விலைக்கு வந்திருக்கும் பொருளா?” என்கிறார் ஸ்டெல்லாமேரீஸ் கல்லூரியின் சமூகப் பணித்துறையில் விரிவுரையாளராகப் பணியாற்றும் டாக்டர் கே.ஜி.ரமா. இவர், பெண்கள் கூட்டுச் செயல் ஒன்றியத்தில் கடந்த எட்டு ஆண்டுகளுக்கு மேலாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு பணியாற்றி வருபவர்.

“பெண் பார்க்க வருவது என்பதே ஆணாதிக்கத்தின் வெளிப்பாடுதான். பெண்ணுக்குக்

# இன்னுமா இந்தப் படலம்!

கருத்துச் சுதந்திரம் என்பதே தரப்படுவதில்லை. இந்நிலை மாற வேண்டும்” என்கிறார் இவர்.

“பெண் பார்க்க வருவது என்பது அருவருப்பூட்டும் ஒரு நிகழ்ச்சி. இரண்டு வருடங்களுக்கு முன் என் சகோதரிக்குத் திருமணம் ஆனது. பழையச் சம்பிரதாய முறையில் பெண் பார்க்க வருவதெல்லாம் கூடாது என்று சொல்லி, கேஷுவலாக வந்து, பேசி பார்த்துச் சென்றார்கள்” என்கிறார் வசுமதி. எத்திராஜ் கல்லூரியின் பொலிடிகல் சயன்ஸ் மாணவி.

“பையனும் பெண்ணும் மட்டும் தனியே - கோவில், ஹோட்டல் மாதிரி பொதுவான இடங்களில் சந்தித்துப் பேசி, மனப் பொருத்தம் இருக்கிறதா என்று மட்டும் பார்த்தால் போதும். பிடித்தால் ஓ.கே. இல்லையா, ஃப்ரெண்ட்லியாக டாட்டா காட்டி விட்டு வந்துவிட லாம். அதை விட்டு விட்டு, வீட்டுக்குக் கூட்டி வந்து, பெண்ணை பொம்மை மாதிரி நிற்க வைத்து, டீ கொடுத்து நடக்க வைத்துக் காட்டுவதெல்லாம் காட்டு மிராண்டித்தனம்” என்று சீறுகிறார் தரமணி கேட்டரிங் கல்லூரி மாணவி வினிதா.

“கோயில், ஹோட்டல் என்று பொது இடங்களில் ஓர் ஆணைச் சந்தித்து எப்படி கூச்சமில்லாமல் பேசிப் பழகுவது?” என்று கேட்கும் பெண்களும் இருக்கிறார்கள்.

“வீட்டுக்கு வரட்டும்; ஆனால் அப்படி வருவதை ஒரு பெரிய நிகழ்ச்சியாக்கி ஆர்ப்பாட்டம் பண்ண வேண்டாம்” என்பது இவர்கள் கட்சி.

இது இப்படியிருக்க, வெளி நாடுகளில் வேலை பார்க்கும் பையன்களுக்கு, இங்கே உள்ளூரில் பெண் பார்ப்பது இன்னொரு கூத்து.

“பையன் பத்து நாள் லீவில் வருகிறான். அதற்குள் பெண் பார்த்து நிச்சயம் செய்துவிட



• சாருஹாசன்



• திருமதி ஒய்.ஜி.பி.



• கல்பகம்



• வினிதா



• கே.ஜி.ராமா



• மஹிந்திரா

வேண்டும்" என்று சொல்லி, வரிசையாக ஏழெட்டு பெண் வீடுகளில் 'அப்பாயின்மெண்ட்' கொடுத்து, ஒரு டாக்ஸி ஏற்பாடு செய்து ஒரே நாளில் எல்லா வீடுகளுக்கும் விஸிட் அடித்து, பிடித்த பெண்ணை 'செலக்ட்' செய்து உடனே நிச்சயம், உடனே உடனே கல்யாணம் என்பதாக இன்று ஆங்காங்கே நடந்து வருவது அருவருப்பானது.

"ஆனால், அப்படி எல்லா வெளிநாட்டுப் பையன்களையும் ஒட்டு மொத்தமாகக் குற்றம் சாட்டாதீர்கள்!" என்றார் வி.எம்.மஹிந்திரா, பி.ஈ., எம்.பி.ஏ. என்று இன்றைய திருமணச் சந்தையின் நம்பர் ஒன் தகுதிகளுக்குச் சொந்தக்காரர்.

"என் விஷயத்தில் - எனக்கு இது உடன்பாடில்லை. பெண்ணும் பிள்ளையும் ஆற அமரப் பேசி முடிவெடுக்க வேண்டிய விஷயம் இது. 'ஃப்ளையிங் விஸிட்'டில் நடக்கிற காரியம் இல்லை" என்கிறார் இவர்.

சடங்காக இல்லாமல் இன்ஃபார்மலாக இருவர் பொது இடத்தில் பேசி முடிவெடுப்பதை ஆதரிக்கும் ஏ.எம்.ஸ்ரீனிவாசன், "ஒரு வேளை இருவருக்கும் பிடிக்காவிட்டால் விஷயம் அந்தோடு போச்சு. இதுவே வீட்டில் பேசி, நாலு பேருக்குத் தெரிந்து, "என்ன ஆச்சு?" 'லெட்டர் வந்ததா?" போன்ற கேள்விகளெல்லாம் இல்லாமல் போகுமல்லவா?" என்கிறார்.




பையனும் பெண்ணும் தனியே பேசுவதென்றால், என்ன பேசுவார்கள்? எனக்கு குழம்பு பிடிக்கும். உனக்கு ரசம் பிடிக்குமா? நான் நாய் வளர்ப்பேன். நீ பூனை வளர்ப்பாயா? - இந்த மாதிரியா? இதனாலெல்லாம் 'புரிந்து கொள்ளுதல்' என்கிற தியரியில் பாஸ் பண்ண முடியுமா என்றால் -

"கண்டிப்பாக முடியும்" - இது வினிதா.

"ஒரு வகையில் சூதாட்டம் போலத்தான். வேறு வழி?" - மஹிந்திரா.

"நமது முடிவுகளின் வெற்றி, தோல்வி, நம்மைச் சார்ந்ததுதான். இதற்கும் பெற்றோர்களைக் குறை சொல்ல முடியுமா?" - ஸ்ரீனிவாசன்.

"வேறென்ன செய்ய முடியும்? நமது பாரம்பரியத்தை மீறி மேல் நாட்டு 'டேடிங், லிவிங் டு கெதர்' முறையையெல்லாம் பின்பற்ற முடியுமா? அவர்களே திருமணத்துக்கு முன் ஆண்-பெண் உறவு கூடாது என்று நம் முறையைப் பின் பற்றத் தொடங்கி இருக்கும் இக்காலத்தில் இது சாத்தியமா?" என்கிறார் திருமதி ஒய்.ஜி.பி.

"அந்தக் காலத்துப் பெண்கள் பூரண விருப்பத்தோடு தான் இந்தப் பெண் பார்க்கும் படலத்தில் கலந்து கொண்டார்கள் என்று சொல்ல முடியாது. இந்தக் காலத்தில் எவ்வளவோ தேவலை. எனக்குத் தெரிந்த ஒரு



"உன்னோட தனியாப் பேசணும்னு சொன்னாளே கல்யாணப் பெண், என்ன சொன்னா?"

"சீர் விஷயத்திலே கண்டிப்பா இருக்கச் சொன்னாள். இல்லாவிட்டால் எல்லாமே அவள் தங்கைக்குப் போய் விடுமாம்!"

- கே.வி.

பெண், தன்னைப் பெண் பார்க்க வந்தவனிடம், தான் வேறொருவனைக் காதலிப்பதைச் சொல்லி, 'நீ தடையாக இருக்காதே' என்று வெளிப்படையாகவே சொல்லி, வெற்றி பெற்றிருக்கிறாள்'' என்கிறார் திருமதி ஒய்.ஜி.பி.

"அதே போல், எல்லாப் பிள்ளை வீட்டாரும், பெண் வீட்டாரை 'இரண்டாம்தரமாகத்'தான் மதிக்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை" என்கிறார் கல்பகம் ஸ்ரீனிவாசமூர்த்தி.

"என் பையனுக்குத் திருமணம் செய்ய முடிவெடுத்த போது, 4-5 பெண்களையெல்லாம் போய்ப் பார்ப்பது இல்லை என்று தீர்மானித்து, வந்த ஜாதகங்களில் பொருத்தமானதைத் தேர்ந்தெடுத்து, கேஷுவலாகப் போய்ப் பார்த்து முடித்து விட்டோம். முடிவெடுப்பதில், என் மகனுக்கு 50சதவீதம் என்றால் அந்தப் பெண்ணுக்கும் 50 சதவீதம் உரிமை தர வேண்டும் என்று நினைத்தோம்; அவள் விருப்பத்தையும் கேட்டறிந்தோம்" என்கிறார்.

**வீ**டியோ வந்து விட்ட இக்காலத்தில், பெண்- பையனை கேஸட்டில் காட்டியே சம்பந்தம் முடித்து விடலாம் என்கிற நிலை உருவாகி விட்டாலும், இது எல்லாத் தட்டு மக்களுக்கும் சாத்தியமா என்பது யோசிக்க வேண்டிய விஷயம்.

மேலும், வீடியோவைப் பார்த்தோ, காட்டியோ ஒரு திருமணத்தை நிச்சயம் செய்வது என்பது எத்தனை இயந்திரத்தனமானது!

மாறாக, "பெண்ணைப் பார்ப்பது என்பதே கண்துடைப்பு விஷயம்" என்கிறார் சாருஹாசன். "என் பெற்றோரையோ, உடன் பிறந்தவரையோ, நான் தேர்ந்தெடுக்காத பட்சத்தில் மனைவியை மட்டும் ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்? இன்ஃபாக்ட், 40 வருடங்களுக்கு முன் நான் பெண் பார்க்கப் போனபோது கூட என் மனைவியை 4-5 நொடிகள் பார்த்திருப்பேனா என்பதே சந்தேகம். கல்யாணத்தன்று வேறு பெண்ணை மாற்றியிருந்தாலும் எனக்கு அடையாளம் தெரிந்திருக்காது. ஆனால் இந்தக் காலத்தில் இளைஞர்கள் அப்படி இருக்க வேண்டுமென்று நாம் எதிர்ப்பார்க்கக்கூடாது. ஏதோ பெண்களுக்கும் பிள்ளைகளுக்கும் கருத்துச் சுதந்திரம் தந்திருப்பதாகச் சொல்கிறோமே தவிர - திருமண விஷயத்தில் பையன்களுக்கு ஜீரோ சாய்ஸ், பெண்களுக்கு மைனஸ் சாய்ஸ் தான்!"

நாம் சந்தித்த யாரும் - இந்தப் பெண் பார்த்து, கல்யாணம் செய்யும் படலத்தை ஆதரிக்கவேயில்லை. மாறாக சீற்றம் மிக்க எதிர்ப்பு! இளம் பெண்களாகட்டும், பையன்களாகட்டும் -இதே கருத்துத்தான். சம்பிரதாயமாக, அன்ன நடை நடந்து, காபி தம்ளரோடு நெருங்கி வருவது ஊனமில்லை என்று உணர்த்தவாம்! அடக்க ஒடுக்கமாக அமர்ந்து, கீச்சுக் குரலில் பாடுவது ஊமை இல்லை என்பதை உறுதிப் படுத்தவாம். அப்படியானால் விழுந்து கும்பிடுவது எதற்கு? 'தேவரீர் என்னைக் கைவிடாதீர்கள்' என்று கெஞ்சவா? இதையெல்லாம் கண்டிப்பாக வெறுக்கிறது, இளைய சமுதாயம்!

ஸோ, பெரிசுகள் தம்மை மாற்றிக் கொள்ள வேண்டியது கட்டாயம். ஆமென்!

**— நிர்மலா சக்கரவர்த்தி**

அட்டையில் நடிப்பு: **ஜோதிமீனா, சலீம்.**

வண்ணப்படம்: **யோகா**



"உருப்படியா ஏதாவது செய்யுங்கன்னு மன்னர் சொன்னதை அமைச்சர் சரியாப் புரிஞ்சுக்கிட்டு..."

"என்ன செய்தார்?"

"அமைச்சர் பதவியை ராஜினாமா செய்துட்டார்!"

- கடுவை கோபால்சாமி

# டு.க.வுடன் மு.க.வும் வேண்டும்!

**இ**டது தோள் பக்கத்தில் வலியெடுக்கும் போது 'ஹார்ட் அட்டாக் வந்துட்டதோ?' என்கிற சந்தேகம் எழுவது இயற்கை. ஆனால் ஹார்ட் அட்டாக்காயிருந்தால் பேஷன்ட்டால் நடக்கவே முடியாது. அளவுக்கு அதிகமான வியர்வை, வாந்தி போன்ற மற்ற அறிகுறிகளும் சேர்ந்து வரும். வெறும் அஸிடிடியால் ஏற்படுகிற தோள்வலி எனில் இந்த அறிகுறிகள் இருக்காது. அந்த வலியை நாங்கள் 'referred pain from Oesophagus' என்று சொல்வோம். (Oesophagus - உணவுக் குழாய்.)

அஸிடிடி இருக்கறவங்களுக்கு உணவுக் கட்டுப்பாடு ரொம்ப முக்கியம். காரம், மசாலா, எண்ணெய்ப் பண்டங்கள் கட்டாயம் குறைத்து விட வேண்டும். வயிறு அடியோடு காலியாகி விடாமல் அவ்வப்போது கொஞ்சம் கொஞ்சமாகச் சாப்பிட வேண்டும். இரு வேளைகள் உணவுக்கிடையே ஒரு பிஸ்கட் அல்லது ஒரு ஸ்லைஸ் ரொட்டி அல்லது ஒரு பழம் சாப்பிடலாம். இடையே சாப்பிடும் உணவும் அளவோடு இருக்க வேண்டும். இல்லா விட்டால் உடல் எடை கூடி, வேறு பிரச்னைகள் விளையும்.

இரவு நேரத்தில் வயிற்றில் கூடுதலாக ஆஸிட் சுரக்கும். அதனால் அஸிடிடி பிரச்னை உள்ளவர்கள் நடு இரவில் ஒரு பிஸ்கட் அல்லது ஒரு கப் பால் கட்டாயம் சாப்பிட வேண்டும்.

போதுமான அளவு தூக்கம் இல்லா விட்டாலும் அஸிடிடி அதிகமாகும். எனவே அஸிடிடிக்காக டாக்டரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டால் மட்டும் போதாது. உணவு, ஓய்வு விஷயங்களிலும் கவனம் செலுத்தாவிட்டால் பலன் இருக்காது.

தியானம் செய்யறதால அஸிடிடியைக் கட்டுப்படுத்த முடியும்னு சொன்னேன். அது



**டாக்டர் பேசுகிறார்**

எப்படின்னு கொஞ்சம் பார்ப்போம். நம் வயிற்றில் அமிலம் சுரப்பது என்பது ஒரு தன்னிச்சை செயல். எப்படி ஊறுகாயைப் பார்க்கும்போதெல்லாம் வாயில் நீர் சுரக்கிறதோ, அப்படியே மன இறுக்கம் உண்டானால் வயிற்றில் அமிலம் சுரக்கும். வயிற்றில் உணவு இருந்தால் அதை செரிப்பதில் அமிலம் வீரியமிழக்கிறது. ஆனால் ஓவர்டைமாக அமிலம் சுரக்கும் போது பிரச்னை ஆரம்பிக்கிறது. இத்தனைக்கும் அந்த அமிலம் 'லேபில்' எக்ஸ்பெரிமன்ட்டுக்குப் பயன்படுத்தும் ஹைட்ரோகுளோரிக் அமிலம் மாதிரி காட்டமானது கிடையாது; அதனுடைய மிக மிக நீர்த்துப் போன வடிவம்தான் வயிற்றில் சுரக்கிறது!

தியானம் செய்வதனால் மனம் அமைதியுற்று சஞ்சலங்கள் குறைகின்றன. அதனால் அமிலச் சுரப்பு கட்டுப்பாட்டுக்குள் வருகிறது.

**க**வலையோ டென்ஷனோ அடையாத





வர்களுக்கு அஸிடிடியே வராதா? என்றால், 'வராது'ன்னு அடிச்சுச் சொல்ல முடியாது.

கிருஷ்ணமூர்த்தியைப் போல ஒரு ஜாலி யான மனிதரைப் பார்க்க முடியாது. அவருக்குச் சராசரி தேவைகளையெல்லாம் சுலபமாக அடையக் கூடிய வசதியான் வாழ்க்கைதான் . உணவுப் பழக்கங்களிலும் கட்டுப்பாட்டு டன்தான் இருப்பார்; சிகரட், மது தொட மாட் டார்....

அப்படியும், 'நெஞ்செரிச்சல், டாக்டர்' என்று அவர் உதவி கேட்டு வரும்படி ஆகி விட்டது.

கிருஷ்ணமூர்த்தியின் அஸிடிடிக்குக் கார ணம் பலவீனமான தசைகள்! வயிற்றையும் உணவுக் குழாயையும் இணைக்கும் தசைப் பகுதி வழக்கமாகச் சுருங்கியிருக்கும். நாம் சாப் பிடும் சமயத்தில் மட்டும் அது விரிந்து கொடுத்து, உணவுக் குழாய் வழியே செல்லும் உணவு, வயிற்றை அடைய வழி விடும். இந்த 'sphincter muscle' - அதான் சுருங்கி விரியும் தசை - தளர்ந்து விட்டால், வயிற்றுக்குள் இருக்க வேண்டிய அமிலம் எல்லை தாண்டி உணவுக் குழாய்க்குப் போய் விடுகிறது! அத னால் நெஞ்செரிச்சல்.

கிருஷ்ணமூர்த்திக்கு மருந்துகளுடன் யோகாசனமும் சிபாரிசு செய்தேன். வயிற்றுப் பகுதி தசைகள் நன்றாக 'மஸாஜ்' செய்யப் படுவது போன்ற விளைவு யோகாசனம் மூலம் கிடைக்கும். அதனால் தசைகள் வலுப் பெறும். அதே சமயத்தில் யோகாசனம் மூலம் மனமும் ஒருமைப் படுவதால் கொஞ்சம்நஞ்சம் டென் ஷன் போய்விடும்.

என்னதான் ஜாலி பேர்வழி என்றாலும், 'காரணமேயில்லாமல் இப்படி துரதிர்ஷ்டவச மாக அஸிடிடி வந்து விட்டதே!' என்கிற மன உளைச்சல் கிருஷ்ணமூர்த்திக்கு வந்து விட்டது! அதை முறியடிக்க யோகாசனம் உதவியது.

கிருஷ்ணமூர்த்தியின் நிலையை inherent laxity in the sphincter என்று நாங்கள் சொல்வோம்.

(inherent - இயல்பாய் அமைந்து விட்ட; laxity - தளர்வு; sphincter - சுருங்கி விரியும் தசை)

அஸிடிடி ஒரு பிரச்னையென்றால் ஆஸிட் சுரக்காமலிருக்கும் நிலையும் பிரச்னை தான்! Achlor hydria என்று இந்த நிலையைச் சொல்வோம். இந்தக் குறைபாடினால் அவதிப் படுவோருக்குத் தேவையான அளவு ஆஸிட் அடங்கிய மருந்துகள் கொடுத்துக் குணப்படுத்து வோம்.

**'நோ** ஸ்மோகிங்; நோ ட்ரிங்க்ஸ்' என்று நாங்கள் பேஷன்ட்களிடம் சொன்னால், 'ஏன் டாக்டர்! எங்க ஆபீஸ் அஸிஸ்டன்ட் மானேஜர் அரவிந்தன் இருபது வருஷம் தினமும் சாயங்காலம் இரண்டு 'லார்ஜ்' போட றார்; அவருக்கு மட்டும் ஒண்ணும் ஆகலயே...?' அப்படின்னு ஆதங்கத்தோட கேட்பாங்க.

அவரவர் உடற்கூறமைப்பைப் பொறுத்து தான் விளைவுகள் அமையும். சிலர் தினமும் இரண்டு 'லார்ஜ்' சாப்பிட்டு முப்பது வருஷம் தாக்குப் பிடிப்பாங்க; சிலர் அதே டோஸ் சாப் பிட்டு மூணே மாசத்தில் கல்லீரல் பழுதாகி ஆஸ்பத்திரிக்குப் போயிடுவாங்க... ஆனால் ஒன்று.. யார் யார் உடல் எத்தனை காலத்துக் குத் தாக்குப் பிடிக்கும் கண்டுபிடிக்கற கருவியெல்லாம் நம்மிடம் கிடையாது! ஆகை யால், இந்தக் காலத்தில் கு.க. எவ்வளவு முக் கியமோ, அவ்வளவு முக்கியம் ம.க.–அதான் மனக் கட்டுப் பாடு. எந்த ருசிக்கும் எந்த பழக் கத்துக்கும் நாம் அடிமையாயிடக் கூடாது.

'பேசறது டாக்டரா? பிரவசனகர்த் தாவா'ன்னு தலையைப் பிச்சுக்கறீங்களா...? வேண்டாங்க; ஏற்கெனவே கண்ட தண்ணியில குளிச்சு முடியெல்லாம் கொட்டிக் கிட்டிருக்கு... அதை எப்படி தடுத்து, கொஞ்சத்துக்குக் கொஞ் சம் அழகைக் காப்பாத்திக்கலாம்னு அடுத்த முறை சொல்றேன்.

**— டாக்டர் பி.ஆர். சுப்ரமண்யம்**

அடுத்த இதழில்....

# திருப்பூர் விஸிட்!

காவல்துறையை கைப்பற்றுபவர்

லஞ்சம் — ஊழல்

கொள்ளை

ஜெ. ஜெயலலிதா திரைப்பட நகர்

கொலை

உங்க ஆட்சியை ஞாபகப்படுத்தற மாதிரியே திரைப்பட நகரத்தையும் உருவாக்கிட்டீங்களே... பேஷ்... பேஷ்...

எதிர்கட்சிகள்

முதல்வர்

புதை சேற்றிலிருந்து தப்பிக்க இந்தப் புத்தகம்தான் வழி காட்டணும்...

பணவீக்கம் — விலைவாசி உயர்வு

எங்க அண்ணாத்தே சிவாஜியை அசிங்கப்படுத்திட்டே... வாடி வெளியே... இந்தத் தடவை உன்னை ஜெயிச்சிடுறான் ஜெயிச்சி...

வாழப்பாடி

ஏன்..? சண்டை போட்டு ரொம்ப நாளாச்சா? நாக்கு தினவெடுக்குதா... இதோ வர்றேன்! இருடி...

மூப்பனார்



# நீங்களுமா மொய்லி?

"நீயுமா புருட்டஸ்?" என்று ஷேக்ஸ்பியர் தமது நாடகத்தில் ஒரு வசனம் வைத்தாலும் வைத்தார், அது நமது அரசியல் நாடகங்களுக்கு மிகப் பொருத்தமான ஒரு மேற்கோள் ஆகிவிட்டது! இன்று "நீங்களுமா மொய்லி?" என்று கர்நாடக மாநில முதல்வரைக் கேட்க வேண்டிய சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது.

நமது நாட்டிலிருந்து துபாய், சிங்கப்பூர் என்று செல்பவர்கள், திரும்பி வரும்போது நிச்சயம் கொண்டு வருவது "நேஷனல்" சமாசாரமாக இருக்கும். பெரும்பாலும் ஒரு டூ-இன்-ஒன். விதம் விதமான மின்சார உபகரணங்களை மிகப் பிரபலமான "நேஷனல்" முத்திரையுடன் தயாரிப்பவர்கள் மாட்ஷுஷிடா எலெக்ட்டிரிக் கம்பெனி. இது ஜப்பானிய நிறுவனம். இதன் மானேஜிங் டைரக்டர் அண்மையில் ஆயிரக் கணக்கான மைல்கள் பயணம் செய்து பெங்களூர் வந்து இறங்கினார். எதற்கு என்றால் மாட்ஷுஷிடா நிறுவனத்தின் தொழில் நுணுக்க ஒத்துழைப்புடனும் ஏராள முதலீட்டுடனும் கர்நாடகாவில் தொழில் தொடங்கத்தான். முதல்வரைச் சந்தித்து இதற்கான பேச்சு வார்த்தைகளை நடத்த ஏற்கெனவே தேதி, நேரம் குறிக்கப்பட்டிருந்தது. கர்நாடக மாநில தொழில்-வர்த்தக சபை இந்தச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்திருந்தது. 'அயல்நாட்டுத் தொழில் முனைவோருக்கு கர்நாடகத்தில் முதலீடு செய்ய வழி காட்டியாக இருந்து உதவ வேண்டும்' என்று இந்தத் தொழில் வர்த்தக சபைக்கு மொய்லி ஏற்கெனவே வேண்டுகோளும் விடுத்திருக்கிறார். அந்த அடிப்படையிலேதான் வர்த்தக சபையின் அழைப்பை ஏற்று முதல்வரைச் சந்திக்க நிர்வாக இயக்குனர் நிஷிடா வந்திருந்தார். இப்படி வந்தவரை முதல்வர் மொய்லி என்ன செய்தார் தெரியுமோ? நிஷிடாவை இரண்டு மணி நேரம் காக்க வைத்து வெறுப்பேற்றினார். அப்புறமாவது சந்தித்தாரா என்றால் இல்லை! சந்திப்பு ரத்து செய்யப் பட்டதாக நிஷிடாவுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டது.

அதிர்ச்சியுற்ற கர்நாடக தொழில் வர்த்தக சபை, 'இது மிகப் பெரிய தவறு, அவமரியாதை, பண்பற்ற செயல்' என்பதையெல்லாம் முதல்வருக்கு எவ்வளவோ சொல்லி அனுப்ப, 'சரி, சாயந்திரம் வீட்டுக்கு வந்து பார்க்கட்டும்" என்று கூறியிருக்கிறார் மொய்லி. ஏற்கெனவே அவமானப் படுத்தப்பட்டதாக உணர்ந்த நிஷிடா, "நான் வர்த்தகம் பேச வந்தேனே தவிர, ஓர் உபசாரத்துக்காக முதல்வர் வீட்டுக்கு விஜயம் புரிய வரவில்லை" என்று கூறி விட்டு, அடுத்த விமானத்திலேயே தாய்நாடு திரும்பி விட்டார்!

தமிழகத்திலேதான் டாட்டா நிறுவனத்தின் கூட்டுறவோடு அமைய வேண்டிய எக்கு ஆலை போயே போச்சு; சிங்கப்பூர் காரிடார் போயிந்தே; மோடியின் முதலீடு காணோகாேன் என்றெல்லாம் பேச்சு அடிபடுகிறது என்றால் கர்நாடகத்திலுமா? மொய்லியின் இந்த அலட்சியப் போக்கினால் ஏற்கெனவே ஒரு ஜப்பானியத் தொழில் நகரம் கர்நாடகத்துக்கு 'பை பை' சொல்லிவிட்டு ஹரியானாவுக்குப் பறந்துவிட்டது! இதனால் கர்நாடகத்துக்கு நஷ்டம் ரூ.20,000 கோடி ஜப்பானிய முதலீடு! இப்போது நேஷனலும் 'நேக்கு வேண்டாம் கர்நாடகா' என்று சொல்லி விட்டது!

ஜெயலலிதா, மொய்லி போன்றவர்கள் தொழிலதிபர்களை அரசியல் வாதிகள் போல் எண்ணக் கூடாது. பதவி, பணம் என்று எதிர்பார்க்கும் அடி வருடிகளான அரசியல்வாதிகள், சாமரம் வீசுவார்கள், துதிபாடுவார்கள், 'அவதாரத் தலைவர்' என்று கூறி தோப்புக் கரணம் கூடப் போடுவார்கள். தொழிலதிபர்களிடம் இதையெல்லாம் எதிர்பார்க்க முடியாது. உள்நாட்டு, அயல்நாட்டுத் தொழிலதிபர்களுக்கு உரிய மரியாதை கொடுப்பதுடன், நேர்மையுடனும் நடந்து கொள்ளவில்லையென்றால் நஷ்டம் தொழிலதிபர்களுக்கு அல்ல; மாநிலத்துக்குத்தான், மக்களுக்குத் தான்.


கல்கி

1994
ஆகஸ்ட் 21
பவ
ஆவணி 5
மலர்: 53
இதழ்: 3




தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# முதலீடு செய்வதற்கு முன்...

புதிய பொருளாதாரக் கொள்கையின் அடிப்படையில் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டதில், ஏராளமான நிறுவனங்கள் மூலதனம் கோரி மக்களிடம் வந்த வண்ணம் இருக்கின்றன. முதலீடு செய்வதற்கு முன் இவற்றின் பொருளாதாரப் பின்னணி, நிர்வாகிகளின் செயல்திறன், உற்பத்தியாகும் பொருளுக்கு மார்க்கெட்டில் உள்ள கிராக்கி முதலானவற்றைப் புரிந்து கொண்டு செயல்படுவதே புத்திசாலித்தனம். அந்த அடிப்படையில் சிந்தித்துப் பின்வரும் நிறுவனங்கள் கல்கி வாசகர்களுக்கு சிபாரிசு செய்யப்படுகின்றன :

## COCHIN REFINERIES BALMER LAWRIE LTD

ஏற்கெனவே நன்கு இயங்கி வருகிற பிரபலமான இரு நிறுவனங்கள் இணைந்து புதிய நிறுவனத்தைத் தோற்றுவித்துள்ளன. பெயரிலும் இந்த இணைப்பு காணப்படுகிறது. புதிய நிறுவனம், கொச்சின் ரிஃபைனரீஸில் கிடைக்கும் பொருள்களைப் பயன்படுத்தி பாலிபியூடேன்களும் கேபிள் ஜெல்லியும் தயாரிக்கும். பெட்ரோ கெமிகல் பொருள்களான இவற்றுக்கு, டெலிஃபோன் கேபிள்கள் போன்றவற்றின் தயாரிப்பிலும் பராமரிப்பிலும் நிறையத் தேவை இருக்கிறது. ரூ. 45 கோடி மூலதனத்தில் ரூ. 10 கோடியை வங்கிகள் கடனாக வழங்குகின்றன. இரு நிறுவனங்களும் போடும் மூலதனம் தவிர மக்களுக்கு ரூ. 17.50 கோடி மட்டுமே ஒதுக்கப்படுகிறது. ஒவ்வொரு பங்கையும் ரூ. 25 கூடுதல் விலை தந்து ரூ. 35க்குப் பெற வேண்டும். இவ்வாறு வழங்கப்படும் 50 லட்சம் பங்குகளின் மதிப்பு வெகு விரைவில் கணிசமாக உயரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## NOVA STEELS (INDIA) LTD

ஏற்கெனவே லாபகரமாக இயங்கி டிவிடெண்ட் வழங்கி வரும் நிறுவனம். எஃகு கம்பிகளும் முறுக்கேறிய கம்பிகளும் தயாரித்து வருகிறது. தனது உற்பத்தியை அதிகரிக்க விரிவாக்கத்தில் இறங்கியுள்ளது. 2 லட்சம் டன் அளவில் பலரக எஃகுக் கம்பிகளைக் கூடுதலாகத் தயாரிக்க 140 கோடி ரூபாய் முதலீடு தேவைப்படுகிறது. இதில் முப்பது கோடியை யூனிட் டிரஸ்ட், ஐ.டி.பி.ஐ. ஆகிய நிதி நிறுவனங்கள் வழங்குகின்றன. ஏற்கெனவே பங்குதாரர்களாக உள்ளோருக்கு ஒதுக்கப்பட்டது போக பொது மக்களுக்கு ரூ. 15 கூடுதல் விலையில் அதாவது ரூ. 25க்கு 2,80,48,800 பங்குகள் விநியோகமாகின்றன. இந்தப் பங்குகளின் மதிப்பு கணிசமாக உயர்வதுடன், விற்காமல் வைத்திருந்தால் லாபப் பங்கீடும் குறைவின்றி இருக்கும் என எதிர்பார்க்கலாம்.

## NORBEN TEA & EXPORTS

டீ உற்பத்தியிலும், விற்பனையிலும் கல்கத்தாவில் நீண்டகால அனுபவம் உள்ள டாகா குடும்பத்தினரால் தொடங்கப்படுகிற நிறுவனம். ஆண்டு ஒன்றுக்கு 19 லட்சம் கிலோ டீ உற்பத்தி செய்யத் திட்டம். இதற்காக 500 ஹெக்டேர் டீ எஸ்டேட் புதிதாக உருவாக்கப்பட்டுள்ளது. இத் திட்டத்துக்கு 15 கோடி ரூபாய் தேவைப்படுகிறது. கடன் பெற்ற தொகை போக மீதம் 11.75 கோடிக்குப் பங்குகள். இவற்றில் மூன்று கோடியை டாகா குடும்பமே முதலீடு செய்ய, பாக்கிக்கு 87,50,000 பங்குகள் ஒவ்வொன்றும் ரூ. 10 விலைக்கே தரப்படுகின்றன. உற்பத்தியில் அறுபது சதவீதத்தை பிரிட்டன் மற்றும் மத்திய கிழக்கு நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய உத்தேசம். காப்பி விலை ஏற்றமானது மேலும் மேலும் பலரை டீ அருந்தத் தூண்டுகிறது என்பதையும் கவனத்தில் கொண்டால் இதுவும் மிக நல்லதொரு முதலீடே.

## KABSONS INDUSTRIES

இந்த ஹைதராபாத் நிறுவனம் 6 கிலோ கிராம் சமையல் வாயு சிலிண்டர்கள் தயாரிப்புக்கு ஔரங்கபாத்தில் தொழிலகம் நிறுவுகிறது. ஓராண்டில் ஐந்து லட்சம் சிலிண்டர்கள் தயாராகும். சிலிண்டர்களில் சமையல் எரிவாயு நிரப்பி விநியோகிக்க நாட்டின் வெவ்வேறு இடங்களில் 14 நிலையங்கள் உருவாக்கவும் திட்டம். இந்த நிறுவனம் ஏற்கெனவே மினி சமையல் வாயு சிலிண்டர்களையும் காஸ் அடுப்புக்களையும் தயாரித்து விற்பனை செய்து வந்த அனுபவம் உடையது. புதிய திட்டத்துக்குத் தேவைப்படும் மூலதனம் ரூ. 13.70 கோடி. ஐ.எஃப்.ஸி.ஐ. நிதி நிறுவனம் ரூ. 5 கோடி கடன் தந்துள்ளது. பாக்கி ரூ. 8.70 கோடிக்குப் பங்குகள். இதில் நிர்வாகிகளே ரூ. 4.15 கோடி மூலதனம் தர, மிச்சம் ரூ. 4.55 கோடிக்குப் பத்து ரூபாய் பங்குகள் அதே விலைக்குப் பொது மக்களுக்கு விநியோகமாகின்றன. நீண்டகால நோக்கில் இது ஒரு நல்ல முதலீடாகவே விளங்கும்.

— வி. கோபாலன்

# Kalki Shopping Page

உயர்ரக சுங்குடி
புடவைகள் மற்றும்
ராணி சாரீஸ்
இந்த துணி லேபிலை
கவனித்து வாங்குங்கள்

**RANI SAREES**
**MADURAI - 12**
**R.A.M**

பெங்கால் காட்டன்
சாரீஸ் கிடைக்கும்
மதுரை
டெக்ஸ் டைல்ஸ்
2.சிவப்பிரகாசம் ரோடு,
பாண்டிபஜார், சென்னை-17.
(பிரில்லியண்ட் டுடோரியல் அருகில்)

---

வீட்டின் பேரில் கடன் விரைவில்
வழங்கப்படும்!



நகைக் கடன்
தாமதமின்றிக் கிடைக்கும்



மாத வட்டி
ரூ. 1.95 மட்டும்
விவரங்களுக்கு:




கல்பதரு பெனிபிட்
பண்டு லிமிடெட்

134, ராசப்ப செட்டி தெரு,
கந்தகோட்டம் அருகில்,
பார்க் டவுன், சென்னை - 3
Ph : 583241

(பங்குதாரராகிப் பயன் பெறுவீர்!)

---

## தமிழ்நாடு அரசின் வேலை வாய்ப்பு பயிற்சி

- தமிழ்நாடு அரசின் தொழில் நுட்ப தேர்வுகளுக்கு வீட்டிலிருந்தே தங்கள் ஓய்வு நேரத்தைப் பயன்படுத்தி தபால் மூலம் பயிற்சி பெறலாம்.

1. கரும்பு இன்ஸ்பெக்டர்,
2. பீல்டுமேன்,
3. விரிவாக்கப் பணியாளர்,
4. வேளாண்மை ஆசிரியர்,
5. தையல் ஆசிரியர்,
6. தையல் மற்றும் கட்டிங்.

- மேலும் ஏராளமான வேலை வாய்ப்புகள் உண்டு. தகுதி : 9 முதல் +2, டிகிரி வரை படித்த ஆண்/பெண் பயிற்சிக்குப் பின் ரூ.2500/- சம்பளம் பெறலாம்.
- விவரம் பெற எழுதுங்கள்.

தமிழ்நாடு டெக்னிக்கல்
இன்ஸ்டிடியூட்,
தபால் பெட்டி : 6004,
சென்னை - 600 083

---

புத்தம் புதிய டிசைன்களில்
உயர்ரக மதுரை சுங்குடி
புடைவைகளுக்கு

**RAMACHANDRA SAREES,**



(மதுரை சுங்குடி
புடவைகளின்
உலகம்)

**37-B, Arya Gowder Road,**
**Postal Colony Bus Stop :**
**West Mambalam, Madras - 33.**
**Bus Route : 11R: 11J; 11E; 11D; 12G; 49J; 49;51; J13; 9A**

வழங்குவோர் : ராமசந்திரா சாரீஸ்,
20 - B பழைய குயவர்பாளையம்
ரோடு, மதுரை - 9

எங்களிடம் இப்பொழுது தரமான
வெங்கடகிரி மற்றும் பெங்கால்
காட்டன்
புடைவைகளும் கிடைக்கும்.

**வி**ஜயா ஆஸ்பத்திரி.

இரண்டாவது மாடி, அறை எண் 219 வாசலில் இரண்டு காவலர்கள், காலில் ஷூக்கள் இல்லாமல் துப்பாக்கிகளை ஓரமாய் சாய்த்து வைத்து விட்டு, சம்பளப் பாக்கி, ஓவர்டைம் என்று பேசிக் கொண்டிருக்கிறார்கள்.

அறையின் கதவில், "உங்கள் அன்பிற்கும் பாசத்திற்கும் நன்றி. ஆனால் infection ஏற்படும் என்ற காரணத்தால் யாரும் என்னைப் பார்க்கக் கூடாது என்று டாக்டர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகவே பதினைந்து நாட்கள் கழித்துப் பார்க்கலாம்" என்று பேப்பரில் எழுதி ஒட்டப்பட்டிருக்கிறது.

எலும்பு சிகிச்சை நிபுணர் டாக்டர் மோகன்தாஸ்தான் கவனிக்கிறார். பக்கத்தில் யாராவது ஒருவர் மட்டும்தான் இருக்கலாம் என்பது டாக்டர் கட்டளை.

"வலது கையில் முக்கியமான எலும்புகள் முறிந்து விட்டன. ஆபரேஷன் செய்து எவர்சில்வர் ப்ளேட் வைத்திருக்கிறார்கள். இடது முட்டியில் நான்கு விரிசல்கள். இடுப்பிலிருந்து சதை எடுத்து அந்த விரிசல்களில் வைத்திருக்கிறார்கள். முட்டிக்குக் கீழேயும் எலும்பு முறிவு. அங்கேயும் எவர்சில்வர் ப்ளேட் வைத்திருக்கிறார்கள். நல்ல வேளையாக தலை தாக்கப்பட்டிருந்தாலும் பாதிப்பு எதுவும் இல்லை" என்கிறார் விஜயனின் மனைவி வசந்தகுமாரி. சட்டக் கல்லூரியில் ஒன்றாகப் பயின்ற போது விஜயனைக் காதலித்து கலப்பு மணம் புரிந்து கொண்டவர். ஆனால் ப்ராக்டிஸ் செய்வதில்லை. இருவருமே பெரும்பாலோர் நினைப்பது போல பிராமண இனத்தைச் சேர்ந்தவர்கள் இல்லை. இரு பெண் குழந்தைகள். பத்மா சேஷாத்திரியில் படிக்கிறார்கள்.

"என் மாமனார், மாமியார் கூட இவரை வந்து பார்க்கவில்லை" என்ற வசந்தகுமாரி, நமது வற்புறுத்தலின் பேரில் கதவுக்கருகில் இருந்து விஜயனை எட்டிப் பார்க்க அனுமதிக்கிறார். கழுத்து வரை போர்த்தப்பட்டு ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கிறார், விஜயன்.

விஜயனின் அப்பா கல்யாணம், பழுத்த கம்யூனிஸ்ட்.

விஜயனுக்கு தினமும் தபாலில் ஏகப்பட்ட குங்குமம், விபூதி பிரஸாதங்கள் 'விரைவில் குணமாக வேண்டி' அனுப்பப்படுகின்றனவாம். பூர்வீகம் திருச்சி - உடையார்பாளையம். "எந்த அரசியல்வாதியையும் விமர்சனம் செய்து




# ஆஸ்பத்திரியில் விஜயன்!

என் மகன் எழுதியதில்லை; பேசியதில்லை. அவன் நடத்துவது உண்மையான சமூகநீதிக்கான சட்டப் போராட்டம்தான்" என்கிறார் கல்யாணம். வழக்குச் செலவுக்கு கட்டாக 20,000 ரூபாயை ஒருவர் நன்கொடையாகக் கொடுக்க வந்த போது 'வேண்டாம்' என்று மறுத்து விட்டாராம் விஜயன். அபூர்வமான ஆசாமிதான்!

— ப்ரியன்

We accept Fixed Deposits at the rate of 24% with incentives.

## எளிய தவணையில் சொந்த வீடு!

**நீங்களும் சொந்த வீடு வாங்கலாம்
காசி பில்டர்ஸ் நிறுவனம் ஒரு
பொன்னான திட்டம் வழங்குகிறது**

காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 14-வது குலுக்கல் 30.10.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல திரைப்பட நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.

இத் திட்டத்தில் புதிதாக வழங்கப்பட்ட GIFT CARD குலுக்கல் மூலம் உறுப்பினர்களை தேர்ந்தெடுத்து கவர்ச்சிகரமான சிறப்புப் பரிசுகள் வழங்கப்பட்டன.

இத் திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல செலுத்தலாம். இத் திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/- முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

### சுபமங்களா திட்டம் :

இத் திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

### வீடு கிடைக்கும் இடங்கள் :

சென்னை கே. கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, கில் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

### FIXED DEPOSITS :

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப்பு நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

## காசி ஹவுசிங் & டெவலப்மென்ட் லிமிடெட்

மற்றும்

## காசி பில்டர்ஸ்

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.
FAX : 044-4821897



# 1942 — A Love Story

ஏகப்பட்ட எதிர்பார்ப்புகளுக்கிடையே ரிலீஸாகியிருக்கும் படம்.

ஒரே டிக்கெட்டில் இரண்டு படம்பார்த்த உணர்வு வருகிறது. லவ் ஸ்டோரி ஒரு படம்; 1942 மற்றொன்று!

முதற்கண் லவ்வைக் கவனிக்கலாம். ஆங்கிலேய அரசின் திவானாகப் பணி பார்ப்பவரின் மகனுக்கும் தீவிரவாத சுதந்திரப் போராட்ட வீரரின் மகளுக்கும் காதல்.

அபாரமான இளமைக் கண்காட்சி. மனிஷா கொய்ராலா மற்றும் அனில்கபூர். அண்ணலும் நோக்க, அவளும் நோக்க - கண்டதும் காதல். லைப்ரரி, நாடக ரிகர்ஸல், கோவில் என்று சகலமான இடங்களிலும் திகட்டத் திகட்டக் காதலிக்கிறார்கள். (எப்படித் தந்தார்கள் 'U' சர்ட்டிபிகேட்?) தோதாக ஆர்.டி. பர்மனின் தேனிசை மழை. கடைசி படமாம். தெரிந்தோ தெரியாமலோ அத்தனை பாடல்களையும் ஸூப்பர் ஹிட் அளவுக்குத் தந்திருக்கிறார். அன்னாருக்கு அஞ்சலிகள்.

பால்மணம் மாறாத மனிஷா. ஒவ்வொரு துளி சிரிப்பிலும் ஒரு நட்சத்திரம் உதிர்வது போன்ற தோற்றம். வசனம் மிகக் குறைவு. ஆகவே, பேசினால் எப்படி இருக்கும் என்பது இனி வரும் படங்களில் பார்க்கலாம்.

உருப்படியான காதல் கதையாக மட்டும் செய்திருக்கலாம். அநாவசியத்துக்கு 1942 சுதந்திரப் போராட்ட மிக்ஸிங். 'களம்' எங்கே என்பதே கடைசி வரை புரியவில்லை. பம்பாயா, டில்லியா, கொருக்குப் பேட்டையா, டுமிங் குப்பமா? 1942க்கான சுதந்திரப் போராட்ட நிஜ நிகழ்வுகள் மருந்துக்கும் இல்லை. யாரோ டக்ளஸ் என்ற ராணுவ ஜெனரலின் கொடூரம், அவரைக் கொல்ல சில தீவிரர்களின் முயற்சி என்பதாக - ஒன்றுக்கொன்று ஒட்டாமல் துண்டாக நிற்கிறது. அந்த டக்ளஸாக வரும் நபரைச் சொல்ல வேண்டும். அநியாய செலக்ஷன். கண்ணில் என்ன ஒரு எக்காளம்? கொடூரம்?

அனில்கபூருக்கு நடிக்க வாய்ப்பில்லை - காதலிக்க மட்டுமே. மாறாக இடைவேளையில் வந்தாலும் ஒரு கம்பீரத்தை ஸ்கிரீன் முழுதும் படர விடும் ஜாக்கி ஷெராஃபுக்கு நூறு கோடி சலாம்.

கிளைமாக்ஸில் ரொம்ப சிரத்தை காட்டியிருக்கிறார்கள். ஆனால் இன்டர்வல் வரை படம் ஏற்படுத்தியிருக்கும் பாதிப்புக்கு, பிற்பகுதி மாமூல் மசாலாத்தனங்கள் அபாரமான குந்தகம்!

எடிட்டர் உயிரைக் கொடுத்திருக்கிறார். கேமராக்காரரும் அவ்வண்ணமே.

என்னதான் ஆங்காங்கே அபத்தங்கள் இருந்தாலும் படம் இரைக்க இரைக்க ஓடப் போவது நிச்சயம்.

— ஆர். பி. ஆர்.



## ஒரு நிலையான தொழிலில் எந்த நிறுவனம் உறுதியாக

**உங்கள் பணத்தை ஒரு நிதி நிறுவனத்தில் டெபாசிட் செய்யும் போது நீங்கள் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? அதன் மூலம் ஒரு நிலையான வருமானத்தைப் பெற வேண்டும்; பொருளாதார மாற்றங்கள் அந்த வருமானத்தைப் பாதிக்கக் கூடாது... என்பதுதானே! அந்த வகையில், நீங்கள் டெபாசிட் செய்ய மிகவும் ஏற்ற நிறுவனம் ஸ்ரீராம்தான். காரணம்—**

நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் லாரிகள் இன்றியமையாத அடிப்படைச் சேவையில் ஈடுபட்டிருக்கின்றன. அந்த லாரிகளுக்கு நிதியுதவி அளிக்கும் ஒரு நிலையான தொழிலில் ஸ்ரீராம் ஈடுபட்டுள்ளது. லாரிப் போக்குவரத்து ரொக்க அடிப்படையில் நடைபெறும் தொழில். உரிமையாளருக்கு நிமிடந்தோறும் லாரிகள் வருமானத்தை ஈட்டிக் கொடுப்பதால், லாரி உரிமையாளரால் தவணைத் தொகையை சிரமமின்றி ஒழுங்காகச் செலுத்திவிட முடிகிறது. அப்படி அவரால் செலுத்த முடியவில்லையென்றால், அந்த லாரியைக் கையகப்படுத்தி விற்பனை செய்து கடனை எளிதில் வசூலித்து விட முடியும்.

**பில் டிஸ்கவுன்டிங் என்னும் கடனுதவி முறையை இதே அளவு நிலையான தொழிலாக கருத முடியாதா?**

நிச்சயமாக முடியாது. பில் டிஸ்கவுன்டிங் ஒரு குறுகிய கால வர்த்தகம். கடனுதவி முழுவதையும் 3 மாதங்களுக்கு ஒரு முறை வெவ்வேறு இனங்களின் மீது மாற்ற வேண்டியது அவசியம். அதுவும், அவ்வப்போது நடப்பில் உள்ள வட்டிவிகிதத்தில், கடன்தொகையைத் திரும்பப் பெற முடியாதபோது, எந்தச் சொத்தையும் கையகப்படுத்துவது எளிதல்ல. எனவே, நிலையான தொழில் என்று பார்க்கும்போது, சமூகத்திற்கு இன்றியமையாத சேவைபுரியும் லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பதே உயர்வானது.

பணத்தின் அருமை தெரிந்தவர்கள் நாங்கள். அதைவிட,

# என் நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனம்...

## ஈடுபட்டிருக்கிறதோ, அதுவே.

**ஸ்ரீராம் — லாரிகளுக்கு நிதியுதவி அளிப்பதில் முன்னணி நிறுவனம்**

ஸ்ரீராமின் பின்பலமாக இருப்பவை — ரூ.700 கோடி மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்கள். ரூ.170 கோடிக்கும் கூடுதலான டெபாசிட் ஆதாரம். உங்களுக்குச் சேவைபுரிய நாடு முழுவதும் 65 அலுவலகங்கள். முழு ஈடுபாட்டுடன் உங்கள் தேவைகளை நிறைவேற்றும் ஸ்ரீராமின் பண்பாடு.

இன்று 1,50,000 டெபாசிட்தாரர்கள் ஸ்ரீராமைத் தங்கள் சொந்த நம்பிக்கைக்குரிய நிதி நிறுவனமாக எண்ணுகிறார்கள். அது உங்கள் நிறுவனமாகவும் இருக்க வேண்டாமா?

For statutory details refer to our advt. in The Hindu dated 9/7/93




ஸ்ரீராம் இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட்
ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் ஃபைனான்ஸ் கம்பெனி லிமிடெட்
ஸ்ரீராம் சிடி யூனியன் ஃபைனான்ஸ் லிமிடெட்

இப்போது டெல்கோ, அசோக் லேலண்ட், சிடி யூனியன் வங்கி ஆகிய நிறுவனங்களின் சக்திமிகு பங்கேற்புடன்.

நிர்வாக அலுவலகம்: மூகாம்பிகா காம்ப்ளெக்ஸ், 4 லேடி தேசிகா ரோடு, மயிலாப்பூர், சென்னை 600 004. போன்: 4991363, 4990960, 4993968.

உங்கள் அக்கறைகளையும் உணர்ந்தவர்கள்.

டெபாசிட்டுகள் திரட்டும் கேம்பெய்ன் இப்போது

'வேதபுரச் சமூக நலத் திட்டங்களில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்தது, போலீஸாரால் காவல் நிலையங்களில் கற்பழிக்கப்பட்ட பெண்களுக்குப் புது வாழ்வு தர ஒரு சீரமைப்புத் திட்டம்...'

(வேதபுர வரலாறு - பேராசிரியர் நவமணி. பக். 128-29)

"யாரோ ஒரு பொண்ணு, அன்னிக்கு வந்திச்சே, அது வந்திருக்குது" என்று தம்புசாமியின் வேலைக்காரன் சொல்வது, வாசலில் நின்ற அபூர்வா காதில் விழுந்தது.

"எந்தப் பொண்ணுடா?"

"செவத்தப் பொண்ணு, கலியன் ஐயா இருக்கிறப்போ வந்திச்சே... வெளியூர்க்காரப் பொண்ணு..."

"ஓ! அ...வ...ளா?" அவர் குரலில் கண்ட தயக்கம், அவள் பணத்தைத் திருப்பிக் கேட்க வந்திருக்கின்றாளோ - என்று அவர் பயப்படுவது போல், அபூர்வாவுக்குப் பட்டது.

அண்ணாமலையைப் பார்க்க முடியவில்லை. அதனால் அவர் பயம், அவரைப் பொறுத்தவரையில் நியாயமானதுதான்.

தம்புசாமி வெளியே வந்தார்.

"இதோ பாருங்கம்மா. அது என் தப்பில்லே. காக்கா, அண்ணாமலை வச்ச சிலையிலே எச்சமிட்டது, அண்ணாமலை பொய் சொல்லி ஜெயிலுக்குப் போயிருக்கான், அண்ணா மலையைப் பார்க்க முடியாட்டிப் போறது, அவன் இடத்துக்கு இன்னொருத்தன் வர மாட்டானா?" என்று கேட்டுக் கொண்டே வந்தார் தம்புசாமி.

"ஏன் நீங்களே வரலாமே?" என்றாள் அபூர்வா.

"அத்தனை பணத்துக்கு நான் எங்கேம்மா போவேன், சொரிகம் வேணும்..."

"கொஞ்சம் தாராளமான உடம்பு, நடுத்தெருவிலே கும்பிடவும் முடியாது..."

"என்ன கிண்டலா பண்றீங்க?"

"இல்லே... முதல்லே நான் உங்களைப் பணத்தைத் திருப்பிக் கேக்க வரல்லே. பயப்பட வேணாம்..."

"பயம் என்ன? ஒரு 'காண்ட்ராக்ட்'னா 'ரிஸ்க்' இருக்கத்தான் செய்யும். அதை எதிர்பார்த்துத்தானே பணத்தைக் கொடுத் தீங்க? எதுக்காக நான் பயப்படணும்?"

"நான் வேற விஷயமா உங்ககிட்டே வந்திருக்கேன்."

"எது விஷயமா?"

"நான் உங்க கட்சியிலே அங்கத்தினரா ஆகணும்."

தம்புசாமி திடுக்கிட்டார்.

## இந்திரா பார்த்தசாரதி

# வி·யா·பா·ரி·க·ள்



"அதெப்படி? நீங்க வெளியூர்க்காரங்க..."

"ஆகலாங்கிறாங்க..."

"யார் சொன்னாங்க...?"

"நஞ்சுண்டன்."

தம்புசாமி இரண்டாவது தடவையாகத் திடுக்கிட்டார்.

"யாரு?" என்று குரலை உயர்த்திக் கேட்டார்.

"நஞ்சுண்டன்."

"அவரை உங்களுக்கு எப்படித் தெரியும்?"

"அது முக்கியமில்லே. நான் பணம் தரவா?"

"கட்சியிலே வெளியூர்க்காரங்க சேர முடியாதம்மா. கட்சி விதி அப்படியிருக்கு. நஞ்சுண்டன் எப்படிச் சொல்வாரு, நீங்க சேரலாம்னு?"

அபூர்வா தன் குறிப்புப் புத்தகத்தை எடுத்து ஒரு டெலிஃபோன் நம்பரைச் சொன்னாள்.

"இதுதான் நஞ்சுண்டன் நம்பர், ஃபோன் பண்ணிக் கேளுங்க."

"அதெப்படிம்மா அவருக்கு நான் ஃபோன் பண்ண முடியும்?"

"சரி... நான் பண்றேன், அவரு உங்ககிட்டே பேசுவாரு, சரியா?"

"சட்டப்படி இது தப்பும்மா..." என்று குரலில் குழைந்து மன்றாடினார் தம்புசாமி.

"நஞ்சுண்டன் சொன்னப்புறம், உங்களுக்கு என்ன சட்டம், இட்டம் அதெல்லாம்...?"

"அவர் கொம்பிலேருக்காரு. உங்களைச் சேர்த்தது தப்புன்னா அவர் தப்பிச்சுடுவாரு. நான்தான் அண்ணாமலைக்கு துணையா போயிருக்கணும்..."

"தப்புன்னு யார் சொல்வாங்க?"

"மேலிடத்திலே."

"நஞ்சுண்டன்தானே மேலிடம்...?"

"எனக்கு அதெல்லாம் ஒண்ணும் தெரியாதும்மா. தயவு



செய்து அவரையே உங்களை மெம்பரா சேர்த்திடச் சொல்லுங்க..."

"ஃபோன் செய்யட்டுமா?"

"யாருக்கு?"

"நஞ்சுகண்டனுக்கு..."

"நெசமாவே சொல்றீங்களா, அவரை உங்களுக்குத் தெரியுமா?"

"ஃபோன் செய்யட்டுமா?"

அவர் அவளை உள்ளே அழைத்துச் சென்றார். அபூர்வா ஃபோன் செய்தாள்.

"தம்புசாமி வெளியூர்க்காரங்களைச் சேர்த்துக்க முடியாதுங்கிறாரு... அப்படியா? அவரிடமே பேசுங்க.."

அவள் தம்புசாமியிடம் ஃபோனைக் கொடுத்து விட்டாள்.

அவர் கை நடுங்கியது.. "என்னம்மா, இது?"

"பேசுங்க..."

"ஐயா வணக்கங்க... அப்படிங்களா? அப்படிங்களா? நான் என்னத்தைக் கண்டேன்? நீங்க எல்லாம் தெரிஞ்சவங்க. சரி... சரி, அப்படியே செய்யறேங்க. வணக்கங்க."

அவர் ஃபோனைக் கீழே வைத்தார். சிறிது நேரம் பேசாமலிருந்தார்.

"உங்களுக்கு எப்படி அவரைத் தெரியும்? அதெபத்தி நீங்க சொல்லவே இல்லியே? அவரை இவ்வளவு நல்லா தெரியும்னா, என்னை வந்து எதுக்கு பாத்தீங்க?"

"சரி... இந்தாங்க, பணம். ரசீது கொடுங்க."

"அவரு ஏதோ சொன்னாரு, உங்க பாஷையிலே... அதுக்கு என்ன அர்த்தம், எந்த மாதிரி அங்கத்தினர்னு பேரு?"

"வெளியூர்க்கார அங்கத்தினர்னா, 'நட்புறவு அங்கத்தினர்'ம்பாங்க, கௌரவ அங்கத்தினர் மாதிரி..."

"அங்கத்தினராகி என்ன செய்யப் போறீங்க?" என்று ரசீதை அவளிடம் நீட்டிக் கொண்டே அவர் கேட்டார்.

"அதுக்குள்ளாற, குடியுரிமை கிடைச்சுட்டதுன்னா நானே தேர்தல்லே நிக்கலாமே?"

"குடி உரிமையா?"

"ஆமாம். விண்ணப்பம் செய்திருக்கேன்."

"அப்பொ ஏதோ தலைவரைப் பாக்கணும்னீங்க, இப்பொ எங்கெங்கேயோ போறீங்களே?"

"எங்கேயும் போகலே, இங்கேதான் இருக்கப் போறேன்... யார் வேணுமானாலும் சுலபமா தலைவரா ஆகக் கூடிய வாய்ப்பு இந்த நாட்டிலேதான் இருக்குன்னு எனக்குத் தோணுது."

அப்பொழுது வாசலில் மணி ஒலித்தது.

"யாரு பாருடா லே..."

கலியன் உள்ளே வந்தார். அவருடன் ஐம்பது வயது மதிப்பிடத்தக்க இன்னொருவரும் வந்தார்.

"வாங்க கலியன், அம்மா உச்சாணிக் கொம்புக்குப் போயிட்டாங்க..."

"என்ன சொல்றீங்க?"

"கட்சி அங்கத்தினராயிட்டாங்க. 'எலெக்‌ஷன்'ல நிக்கப் போறாங்க..."

"அதெப்படி? வெளியூர்க்காரங்க...?"

"யார் சொன்னாங்க? - குடி உரிமைக்கு விண்ணப்பித்திருக்காங்க, கிடைச்சுடும். ஏதோ என்கிட்டேயும், உன்கிட்டேயும் கெஞ்சற மாதிரி பாவனை பண்ணி, நம்மை ஏமாளியாக்கிட்டாங்க.. தலைவரையும் பார்த்திருப்பீங்களே, படத்திலேருக்கிற மாதிரிதான் இருக்காங்களா, இல்லாட்டா...."

"நான் உங்களைத்தான் பாக்க வந்தேன், அம்மாவைப் பாத்தா போதும் போலிருக்கே. என் வீட்டிலேயேருக்காங்க..."

"எது விஷயமா பாக்க வந்தீங்க?" என்றார் தம்புசாமி.

"இவரு நம்ம சகலை. மகனை மெடிகல்லே சேக்கணும்."

"கரெக்ட்... அம்மாவைப் பிடிங்க."

"இதெப் பத்தியெல்லாம் எனக்கு ஒண்ணும் தெரியாது. மார்க் இருந்தா தன்னாலே அட்மிஷன் கிடைக்கிறது."

"அதெல்லாம் போதாதுங்க. சிபாரிசு, பணம் ரெண்டும் முக்கியம். சிபாரிசு இருந்தாலும் பணம் கொடுத்தாவணும்..." என்றார் ஐம்பது வயதுக்காரர்.

"என்ன பணம்?"

"ஏஜெண்ட் இருப்பாங்க... அவர்களைப் பாத்துக் கொடுக்கணும்."

"லஞ்சமா?"

"என்ன இப்படிச் சொல்றீங்க? அரசாங்கத்துக்குக் கொடுக்கிறது லஞ்சமா? பொதுக் காரியங்களுக்காகத்தானே வாங்கிக்கிறாங்க? 'சமூகநலத் திட்டங்கள்..' கேள்விப்பட்டிருக்கீங்களா? போலீஸ்காரங்க, போலீஸ் ஸ்டேஷனில் பெண்களைக் கற்பழிச்சா, கற்பழிக்கப் பட்டவங்களுக்குப் புது வாழ்வு தருவதற்காகச் சீரமைப்புத் திட்டம், முகமூடிக் கொள்ளைக் காரங்க வீட்டிலே வந்து கொள்ளையடிச்சா, பணம் போனாலும் போவுது, சரீரத்தைக் காப்பாத்திக்க 'புல்லட்-ப்ரூஃப்' ஜாக்கெட், பிச்சைக்காரங்க பிச்சை எடுக்க வசதியா, மண்குவளைகளுக்குப் பதிலா, அலுமினியப் பாத்திரங்கள்...' இன்னும் எத்தனையோ நல்ல திட்டங்கள்... இதுக்கெல்லாம் பணத்துக்கு எங்கே போவாரு தலைவரு? நஞ்சுகண்டனைக் கேளுங்க, அவர் சொல்வாரு..." என்றார் தம்புசாமி.

"நஞ்சுகண்டனா?" என்றார் கலியன்.

"ஆமாம். நஞ்சுகண்டன். பெரிய கொம்பு!

அம்மாக்கு சிநேகிதராகிட்டாரு. இப்போ ஃபோன்லே சொன்னாரு, அம்மாவைக் கட்சி யிலே சேத்துக்கன்னு..."

கலியன் ஆச்சர்யத்துடன் அபூர்வாவைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

"நெசமாவா?"

"பொய்யா சொல்றேன். இப்பொத்தான் பணம் கட்டினாங்க."

"ஏங்க... நஞ்சுண்டனை எப்படி உங்க ளுக்குத் தெரியும்? அவர்தான் தலைவருக்கு வலது கைங்கிறாங்க... அப்படியா?"

"எனக்குத் தெரியாது..."

"நஞ்சுண்டனை எப்படித் தெரியும்? நாங்க கட்சி வழியா போய் மேலே ஏற முடி யாமெ திண்டாடிக்கிட்டிருக்கோம். நீங்க இப்படிப் பின்பக்கமா வந்து, கொம்பிலே ஏறி உக்காந்திட்டீங்களே. நஞ்சுண்டனும் கட்சி வழியா வந்தவரில்லேதான், ஆனா சாமர்த்தியசாலி, கெட்டிக்காரர்..." என்றார் தம்புசாமி.

கலியன் தொடர்ந்து அபூர்வாவைப் பார்த்துக் கொண்டே நின்றார்.

அபூர்வா சொன்னாள் : "சரி... நான் அப்பொ வரேன்."

"என் விஷயத்தைக் கொஞ்சம் கவனி யுங்க. என் வீட்டிலேருக்கீங்க. இந்த உபகாரம் கூட பண்ணக் கூடாதா?" என்றார் கலியன்.

"என்ன உபகாரம்?"

"என் சகலை பையன் மெடிகல் அட் மிஷன். எம்.பி.ஸி. 38%. ரெண்டு லட்சம் தர தயாராருக்காரு. அதிகப்படியா போனா மூணு லட்சம்."

" 'எம்.பி.ஸி.'ன்னா?"

" 'மிகவும் பின்தங்கிய வகுப்பு.' ரிசர் வேஷன்லே கூட வராத கேஸ் இது. ரொம்ப குறைச்சலான மார்க்."

"உங்க சகலை என்ன செய்யறாரு?" என் றாள் அபூர்வா.

"ஒரு மில் இருக்குது... அப்புறம் என் மாதிரிதான், சினிமா கொட்டா, கள்ளுக் கடை...."

"பையன் வியாபாரத்தைக் கவனிச்சா போதுமே, எதுக்கு மெடிக்கல்...?" என்றாள் அபூர்வா.

கலியன் அவளைக் கோபத்துடன் பார்த் தார். அப்பொழுது டெலிஃபோன் ஒலித்தது.

ஃபோனை எடுத்த தம்புசாமி அபூர்வா விடம் சொன்னார் : "உங்களுக்கு..."

"தாங்க்யு..." என்று வாங்கி, பேசி விட்டு வைத்தாள்.

"மிகவும் ஸ்பெஷல் கேஸாக எடுத்து, எனக்குக் குடி உரிமை வழங்கிட்டாங்க... நஞ் சுண்டன் சொன்னார்..." என்றாள் அபூர்வா.

(தொடரும்)



## அருள் வாக்கு

கீதையில், விஷாதத்தை, (அதாவது மனக் குழப்பத்தை) ஏன் பகவான் யோகமென்று சொன்னார்? அதனால் (அந்த மனக் குழப்பத் தால்) தானே அர்ஜுனனுக்கு ஆத்ம ஸம்பந்தமாக நினைக்கத் தோன்றிற்று? அதனால்தான்! அது வரையிலும் அவன் எத்தனையோ பேருடன் கொஞ்சம் கூட மனக்குழப்பமேயில்லாமல் சண்டை போட்டு ஜயித்து ''விஜயன்'' என்றே பெயர் வாங்கியிருக்கிறான். இப்போதுதான் இந்த குருக்ஷேத்திரத்தில் பாட்டனாரான பீஷ்மர், ஆசார்யரான த்ரோணர், பெரியப்பா பிள்ளை களான கௌரவர்கள் முதலானவர்களைப் பார்க் கும் போது அவனுக்கு மனஸ் குழம்பி, 'இவாளை ஜயிச்சு ராஜ்யம் ஆண்டு என்ன ஆகணும்? இதைவிட, எல்லாத்தையும் விட்டுட்டு பிச்சை வாங்கிச் சாப்பிடறது மேல்' என்ற எண் ணங்கள் தோன்றியிருக்கின்றன. இது மனஸ் பக்குவப்பட்டு கனிந்து ஏற்பட்ட விரக்தி இல்லைதான். இதுவரை ஹிம்ஸையா, அஹிம் ஸையா என்று யோசிக்காமல் அந்நிய மநுஷ்யர் களுடன் பராக்ரமத்தோடு யுத்தம் செய்தவன், இன்று 'இவா நம்ம மநுஷாளாச்சே' என்ற அஞ் ஞான அட்டாச்மென்டினாலேயேதான், பாச பந்தத்தினாலேயே தான் ஒரு அசட்டு விரக்தியில் நினைத்திருக்கிறான். தர்மயுத்தம் செய்ய வேண் டிய அவன் இப்படி அசடாகி விட்டானே என்று தான் பகவான் அவனை வைகிறார். ஆனாலும் இப்படி ஒரு குழப்பம் வந்ததால்தானே அவன் ராஜ்ய போகம் தவிர வேறொன்றை, நிவ்ருத் தியை, நினைக்க முடிந்தது? ஸத்ய தத்வத்தை பகவான் அவனுக்கு உபதேசிப்பதும் இதனால் தானே ஸாத்யமாயிற்று? அதுவரை, இருட்டுத் தனம் பண்ணிக்கூட ஸுபத்ரையை அவனுக்கு விவாஹம் பண்ணுவிப்பது முதலான கார்யங் களைத்தான் பகவான் அவனுக்குப் பண்ண முடிந்ததே தவிர, ஞானோபதேசம் என்று வாயைத் திறக்க முடிந்ததோ? அதனால் எப் படியோ ஒருவிதத்தில் விஷாதமும் நல்லதில் கொண்டு சேர்த்ததால் அதற்கு 'விஷாத யோகம்' என்றே பெயர் ஏற்பட்டு விட்டது!

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச் சார்ய சுவாமிகள்.

**மீண்டும் வந்துவிட்டது... உங்களுடைய செல்ல மகளுக்கு.**



# ராஜ் லக்ஷ்மி

## யூனிட் ப்ளான்

*அவளுடைய வளமான எதிர்காலத்திற்கு*




### சிறப்பம்சங்கள்:

- காலவரையறையற்ற ப்ளான்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்பொரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ. 1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ. 21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப் பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- ஒவ்வொரு காலவரையிலும் அறிவிக்கப்படும் போனஸ் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.

எல்லா மியூசுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவைகளாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் ஆட்சித்திறம் பொறுத்து திட்டங்களின் NAV ஏறிடவும் இறங்கிடவும் செய்யும். ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே மற்றும் திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வளர்ச்சியையோ அல்லது வருமானத்தையோ எவ்விதத்திலும் சுட்டிக்காட்டுவது ஆகாது. தயவுசெய்து முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

**மண்டல அலுவலகம்:** 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101

**கிளை அலுவலகங்கள்:** • **கோயம்புத்தூர்.** போன்: 214973 • **சென்னை.** போன்: 517101, 517190 • **மதுரை.** போன்: 38186 • **திருச்சி.** போன்: 27060

UTI-59/94 I.A.B

# சென்சார் ஜோக்ஸ் போட்டி முடிவு!

**ரூ.250/- பரிசு பெறும் ஜோக்**

"படத்தில இருட்டா எடுத்திருந்த காட்சிகளை யெல்லாம் சென்சார்ல வெட்டிட்டாங்களா...! எதுக்கு?"

"இருட்டுல என்ன நடக்குதுன்னு தெரியாம எப்படி படத்துக்கு சர்டிபிகேட் கொடுக்க முடியும்னு அந்த காட்சிகளையெல்லாம் வெட்டிட்டாங்களாம்!"

– ஒட்டநத்தம் உ.ர. சங்கர். திருச்சி.

**ஆறுதல் பரிசு பெறும் ஜோக்ஸ்.**



"பாட்டி வடை சுட்ட கதையை எடுத்தேன், சென்சாரில மாட்டி கிடுச்சு."

"எப்படி?"

"காக்கா பாடின பாட்டு, டபுள் மீனிங்காம்..."

–ஆர்.வசந்த குமார், கும்பகோணம்.




"அதுக்குன்னு 69% செக்ஸுக்கும் வயலன்ஸுக்கும் ஒதுக்கீடு கேட்டு சென்ஸார் போர்டை எதிர்த்துப் போராடறது கொஞ்சம் கூட நல்லா யில்லே சார்!"

– ராம்ஜி, சென்னை.

"சார்! ஒரு சிம்டா மூக்குப் பொடி தர்றீங்களா?"

"நாசமா போச்சு! யோவ்! இது பொடி டப்பா இல்லை. 'சென்ஸார்' இடமிருந்து தப்பிச்ச பிலிமைத் தான் இதுல வைச்சிருக்கேன்!"

-கோ.சுசீலா, சென்னை.





"இரட்டை அர்த்தமுள்ள ஆபாச வசனங்களை நாங்க அனுமதிக்க முடியாதுன்னு சென்சார்ல சொல்லிட்டாங்க!"

"அப்புறம் என்ன பண்ணினீங்க?"

"ரொம்ப கஷ்டப்பட்டு மூணு அர்த்தம் வர்ற மாதிரி வசனத்தை மாத்தி ரிலீஸ் பண்ணியிருக்கோம்!"

பாலாஜிதாசன், திருச்சி-4.

# வீடு மனைவி மல்யுத்தம்

பா.ராகவன்

ஒரு சடன் பிரேக். ஒரு வீரியக் குலுக்கல். சட்டென்று ஆட்டோ நிற்க, பிரசன்னமானாள் கௌஸல்யா. தோளில் ஒரு பை. கையில் ஒரு பை. இடுப்பில் ஒரு பை. அநேகமாகத் திருட்டு ரேஷன் அரிசி.

"வாடி, குயின் ஆஃப் இங்லண்டுக்குக் குறுக்கப் பிறந்தவளே. அறுவடையெல்லாம் ஆச்சா?"

"உக்கும். ஒன் அவர் லேட்டானா, உரசிப் பார்க்கத் தோணற தாக்கும். அநாவசிய வம்பு வேணாம், சொல்லிட்டேன். ரேஷன்ல க்யூ ஜாஸ்தி."

"ஆஹா தெரியுமே. அந்த சுந்தரிபாய் சுலோசனா, ஆயிரம் அழகுக் குறிப்புகள் சொல்லியிருப்பா. வாயப் பிளந்து கேட்டு நின்னிருப்பே. வாய் பார்த்த வீட்டை நாய் பார்க்கும் தெரிஞ்சுக்கோ."

"நடுரோடுல ரவுசு வேணாம், சொல்லிட்டேன். உள்ள போய் ஆரம்பிக்கலாம்."

"விட்டேன்னா தெரியுமா? புருஷன் ஆபீஸ் விட்டு, ரெண்டு மணி நேரமா ரோட்ல நிக்கறான். கதவைப் பூட்டிண்டு, அம்மா உலா கிளம்பியாச்சு."

"அரிசி கிலோ ரெண்டரை ரூபா. அம்மா மாஞ்சி மாஞ்சி எழுதியிருந்தா, என்னமோ பஞ்சத்துல நாதியத்து நிக்கறா மாதிரி. சரிதான், கிழம் கேக்குதேன்னு கைகாரியம் விட்டுப் போனா, இதுவும் பேசுவீங்க. இன்னமும் பேசுவீங்க."

"எங்கம்மாவா? உங்கம்மாவா?"

"உங்க மாமியாரோட சம்மந்தி. போதுமா? வழி விடுங்க."

கிருஷ்ணன் சட்டென்று ஒதுங்கி வழி விட்டான். கௌஸல்யா மூட்டைகளை அவன் கையில் திணித்து, விசுக்கென்று உள்ளே போனாள்.

"சனிக்கிழமை அரை நாள்தானே ஆபீஸ்? அப்படியே ஸ்கூலுக்குப் போய் மீனாவைக் கூட்டி வரது? தோ, லொங்கு லொங்குன்னு அதுக்கும் நான் ஓடணும். ஆம்பளையாம் ஆம்பளை!"

"இதா, கௌஸல்யா, வம்பு வேணாம். பயங்கரத் தலைவலி. காப்பி போடு."

"உப்பு இல்லை."

கிருஷ்ணன் ஒரு காரியம் செய்தான். எழுந்து வந்து பளார் என்று ஒரு அறை.

"கிண்டலாடி உனக்கு? ஆபீஸ்ல நாத்தி யெட்டு தலைவலி. இங்க வந்தா உன்னோட மல்யுத்தம். என்ன நினைச்சுட்டிருக்கே நீ?"

"ஓஹோ, கை நீளற அளவுக்கு வந்தாச்சா? உங்களோட குடித்தனம் பண்ண இனி என்னால் ஆகாது. நான் போறேன்."

"ஒழி."

"எங்கன்னு தெரிஞ்சுக்கக் கூட விருப்பமில்லையாக்கும்?"

"கழுதை கெட்டா குட்டிச்சுவர். என்னமோ உங்கப்பன் நூறு மூட்டை சீர் வெச்சுண்டு காத்திருக்கா மாதிரி."

"பாருங்க, எங்கப்பா பத்தி ஒண்ணும் பேச வேண்டாம். ஒரு நாளும் இப்படி அவர் எங்கம்மாவைக் கைநீட்டி அடிச்சதில்லை. நாலாயிரம் சம்பாதிக்கிற திமிர். ஒருநாள் வீட்ல இருந்து காரியம் பார்த்தா கஷ்டம் புரியும் ஐயாவுக்கு. பெரிய பேங்க் உத்தியோகம். எப்பப்பார் அந்த பக்கத்து சீட் பாலாமணியோட அரட்டை. புடைவை பார்த்தா வழிசல்."

"அடிப்பாவி! யார் சொன்னா இதெல்லாம் உனக்கு? அத்தனையும் அபாண்டம்!"

"தெரியுமே, போன மாசம் ஆபீஸ் டூர்னு ஒகெனகல் போன போது அவகிட்ட அடல்ட்ஸ் ஒன்லி ஜோக்கெல்லாம் அடிச்சீங்களாம்? வீட்ல ஒரு பெண்டாட்டி, குழந்தையை வெச்சுண்டு - வெக்கமாயில்லை?"

"யாருடி சொன்னா? அன்னிக்கு ஃபைல் வாங்கி வர அனுப்பினேனே, ப்யூன் தண்டபாணி, அவனா? ராஸ்கல். பொளந்துடறேன்."

"தப்பு செய்யறது நீங்க. அடுத்தவங்களை எதுக்குக் காயணும்?"

"கண்டதெல்லாம் பேசாத கௌஸல்யா. அவங்க கல்யாணமானவங்க. வெறும் பிரெண்ட்ஷிப்தான்."

"எக்கேடு கெட்டுப் போங்க. நான் போறேன் எங்கம்மா வீட்டுக்கு."

"சொல்றதைக் கேளு. சும்மா சும்மா உங்க அம்மா வீட்டுக்குப் போகாதே. ஊர்ல நாலு பேர் என்னைப் பத்தி என்ன நினைப்பான்?"

"என்னவும் நினைச்சுக்கட்டும். ஆபீஸ்ல ஒரு தொடுப்பு இருக்குன்னு நினைச்சுக்கட்டும்."

"செருப்பு பிஞ்சுடும் கௌஸல்யா. மரியாதையாப் பேசு!"

"இதுல ஒண்ணும் குறைச்சல் இல்லை.



நாக்கு நாலடி. கை எட்டடி. வேற ஒரு உபயோகம் உண்டா? எலக்ட்ரிக் பில் கட்டச் சொல்லி எத்தனை நாளாச்சு? எம்.ஈ.எஸ்.காரன் காலைல வந்து ஃப்யூஸ் பிடுங்கிட்டுப் போகட்டுமான்னு கேக்கறான். நாக்கைப் பிடுங்கிட்டு சாகலாம்."

"அடடா, மறந்துட்டேன்."

"Gas-க்கு எழுதி வெக்கச் சொல்லி மூணு நாளாச்சு. இன்னிக்கோ நாளைக்கோ தீர்ந்துடும்."

"சே, ஞாபகம் இல்லை."

"எப்படியும் போங்க. எனக்கென்ன?"

"த பார்! நீ வம்பு பண்ணணும்னு முடிவோட இருக்கேன்னு நினைக்கறேன். காப்பி உண்டா? இல்லையா? அதைச் சொல் முதலில்."

"கைநீட்டி அடிக்க மட்டும் தெரியற மாதிரி காப்பி போடவும் தெரிஞ்சிக்கறது! நான் போறேன், மீனாவைக் கூட்டிட்டு. எப்பவாச்சும் பொண்டாட்டி வேணும்னு தோணினா 70ஜே பஸ் பிடிச்சி, வடபழனி வந்து பாருங்க."

கௌஸல்யா சட்டென்று உள்ளே திரும்பி இரண்டு புடைவை, இரண்டு ரவிக்கை, இரண்டு உள்பாவாடை, ஒரு குமுதம், ஒரு கல்கி எடுத்து பெட்டியில் அடைத்து மூடி, விசுக்கென்று வெளியே வந்தாள்.

கௌஸல்யா பெட்டியுடன் வெளியே வந்தாள். வழியே போகிற ஆட்டோவைக் கைதட்டி நிறுத்தினாள். ஏறி, போயே விட்டாள்.

**'சே!'** என்றான் கிருஷ்ணன். தலைவலி இன் இன்னென்று தாக்கிற்று. இன்று ஒரு ரூபாய் நோட்டு கவுண்டிங். உயிர் போகிற சமாசாரம். பத்து ரூபாய், நூறு ரூபாய் போல் அத்தனை சுலபமல்ல. பேச்சுத் துணைக்கு பாலாமணியும் இல்லை. கேஷுவல் லீவ். வயிற்று வலி, மூட்டு வலி என்று ஏதோ சாக்கில் - இன்று சனி, நாளை ஞாயிறு- இரண்டு நாள் சந்தோஷம். இங்கே ஒரு காப்பிக்கு சிங்கி அடித்துக் கொண்டு கிருஷ்ணன்...

தலையெழுத்தே என்று சமைய லறைக்குப் போனான். ஸிங்க்கில் கழுவாத பாத்திரங்கள். அலம்பாத தட்டு. சிதறிய சாம் பார்ப் பொடி. காய்ச்சாத பால். கரி படிந்த குக்கர். பிரிக்காத மளிகை சாமான். மொய்க்கும் ஈ.

சட்டென்று வெளியே வந்தான். சட் டையை மாட்டி, கதவைப் பூட்டி, சர் ரென்று கணபதி விலாஸுக்கு விட்டான் சவாரி.

இரண்டு ரூபாய் காப்பி. ஒன்னே கால் ரூபாய் வில்ஸ் ஃபில்டர். வீட்டுக்குப் போய் ஆகிற காரியம் ஏதுமில்லை. பஸ் பிடித்து காஸினோ. தி ஸைலன்ஸர். துப்பாக்கிகள் மற்றும் முத்தங்கள் நிறைந்த உன்னத குடும்பச் சித்திரம்.

போரடிக்க, இண்டர்வெலில் எழுந்து வெளியே வந்து- பஸ் கிடைக்கவில்லை - ஆட்டோ பிடித்து, நாற்பத்தெட்டு ரூபாய் தண்டம் அழுது, வீடு சேர்ந்து, பொத்தென்று படுக்கையில் விழுந்தான்.

'பெண்ணுக்குக் கல்யாணம் ஆன கையோடு பெற்றோர், வீட்டை காலி பண்ணி காசி, ராமேஸ்வரம் போய் விட வேண்டும் என்று அரசியல் சட்டத் திருத்தம் கொண்டு வந்தால் தேவலை' என்று என்னமோ அபத்த யோசனைக்கு நடுவே அகஸ்மாத்தாகத் தூங்கி விட்டான்.

**வ**ந்ததே ஞாயிறு. பொலபொலவெனப் பொழுது விடிந்து, கலகலவென பறவை சிரித்து, தளதளவெனக் காய்கறிக்காரி கூவிப் போய், பளபளவென அன்றைய தினம் ஒளிச் சட்டை போட்டுக் கொண்டது என்று எழுதினால் அடிக்க வருவீர்கள்.

கிருஷ்ணன், அன்றைய தினத்துக்கான பணிகளை வகுத்துக் கொண்டான். பெண்டாட்டி வீட்டில் இல்லை. ஸோ, நோ சமையல் பிஸினஸ். குளித்து முழுகி, நேரே ராமபத்திரனைப் பார்க்கப் போனான். பான்பராக் ராமபத்திரன்.

''வாடா, கிருஷ்ண பரமாத்மா. பெண்டாட்டியோட டூவா?''

"எப்படிக் கண்டுபிடிச்சே?"

"அது உன் மூஞ்சியைப் பார்த்தாலே தெரிந்து விடும்."

"வேற என்னெல்லாம் தெரியுது?"

''சம்சாரம், ஆத்தாவூட்டுக்குப் போயிட்டா. ஐயா, டெம்ப்ரவரி பிரும் மச்சாரி. வீட்டுல தனியா இருக்க போர டிக்குது. உன்னதமான ஞாயிறு வீணாகிற சோகம் நெஞ்சைக் கசக்கிப் பிழிகிறது. ஸோ, ஆபத்பாந்தவன், அநாத ரட்சகனாகிய ராமபத்திரனிடம் சரண் புகுந்திருக்கிறாய்!''

"ராட்சசன்டா நீ!"

''கையில சொத்து எத்தனை வெச் சிருக்கே?''

"ஏழு ரூபா எழுபத்தஞ்சு காசு."

"வேந்தர் இறந்தவெளித் திரையரங்குல பக்த பிரகலாதா போட்டிருக்கான். போய்ப் பார்!"

"கை விட்றாத கண்ணா."

''ஸாரி வாத்யாரே! நம்ம ஹோம் மினிஸ்டரோட நைனாவுக்கு பைல்ஸ் ஆப்ப ரேஷன். போயே ஆகணும்னு மகா அடம். என்னமோ நான்தான் ரிப்பன் கட் பண்ணப் போறா மாதிரி''

தலையெழுத்தே என்று திரும்பி, விட் டான் சவாரி.

நாள் முழுக்க அங்கே இங்கே அலைந்து, பிற்பகல் தேவநேயப் பாவாணர் லைப் ரரியில் 'குடும்பத்தில் குழப்பம் வந்தால் சமாளிப்பது எப்படி?' என்ற புத்தகத்தால் முகத்தை மறைத்துக் கொண்டு நிம்மதியாய் இரண்டு மணி தூங்கினான்.

மாலை வீடு வந்து, டீவியில் அபத்த தமிழ் சினிமா பார்த்து, சாப்பிடாமல் படுத்தான். அவனுக்குள் இருந்த கொஞ் சுண்டு மனுஷத் தன்மை கண்விழித்தது. சே, அடித்திருக்கக் கூடாது. என்ன ஒரு அழ கான, அன்பான மனைவி. எதற்காகடா அடித்தாய் அறிவு கெட்ட ராஸ்கல்? உன் அம்மாவுக்கு அரிசி வாங்கத்தானே போயி ருந்தாள்? அங்கே சுந்தரிபாய் சுலோ சனாவிடம் அழகுக் குறிப்பு கேட்டுக் கொண்டால் என்ன தப்பு? உன் பெண் டாட்டி- நீ தானே ரசிக்கப் போகிறாய். புத்தி கெட்ட ராஸ்கல். சுயபச்சாதாபத்துடன் தூங்கியே விட்டான்.

**ம**றுநாள். அரக்க பரக்க குளியல். அசிரத்தையாய் கணபதி விலாஸ் காய்ந்த தோசை. அதிவேகமாய் ஆபீஸ்.

"என்னங்க, கிருஷ்ணன், பயங்கர டல் அடிக்கிறீங்க? பார்லிமென்ட்டுல நம்பிக்கை யில்லாத் தீர்மானமா?''

பக்கத்து ஸீட் பாலாமணி. கிருஷ்ணன்

# வசதி, பாதுகாப்பு, நம்பிக்கை ஆகியவை வாழ்வில் இடம் பெற... வழிகாட்டுகிறது எல்டிசி.



## பென்ஷனர் பெனிஃபிட் திட்டம்

**பாதுகாப்புப் பெறுவது உங்கள் பணம் மட்டுமல்ல. உங்களுடைய மன அமைதியும் கூட.**

வயது 60 கடந்தால் என்ன? அதன் பின்னரும் நீங்கள் மன நிறைவோடு வாழ முடியும். அதற்கு உதவியாக இதோ ஒரு சிறப்பு டெபாசிட் திட்டம் — முதியவர்களுக்கு மட்டும். இத்திட்டத்தின் மூலம் ஒரு டெபாசிட்தாரர் என்கிற முறையில் நீங்கள் மாதாமாதம் ஒரு நிலையான உயர் வருமானத்தைப் பெறுகிறீர்கள். இதற்கான வட்டி வாரண்டுகள் பின் தேதியிடப் பட்டு முன்னதாகவே உங்களுக்கு அளிக்கப்பட்டு விடுகின்றன.

எனவே, கவலைகளிலிருந்து விடுபட்டு நீங்கள் மன நிறைவையும் அமைதியையும் நிச்சயமாகப் பெற முடிகிறது.

உங்கள் வளமைக்கு வழிகாட்டும் ஐந்து வெவ்வேறு டெபாசிட் திட்டங்களை லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட் உங்களுக்கு அளிக்கிறது: ஃபிக்சட் டெபாசிட், குமுலேடிவ் டெபாசிட், ரொக்க சர்ட்டிஃபிகேட், ரெக்கரிங் டெபாசிட், பென்ஷனர் பெனிஃபிட் திட்டம்... ஒவ்வொரு டெபாசிட்தாரரும் இத்திட்டங்களின் மூலம் பெறுவது: சிறப்பான பலன்கள், தனிப்பட்ட சேவை.

எல்டிசியின் டெபாசிட் தொகைகள் 1993-94ல், ஒரே ஆண்டில் 100% வளர்ச்சி கண்டுள்ளதற்கு இவைதான் காரணம். இந்த வெற்றியினால் ஊக்குவிக்கப்பட்டு எல்டிசி மற்றுமொரு லட்சியத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறது: 31 மார்ச் 1995 அன்று அடைய நிர்ணயித்துள்ள டெபாசிட் தொகை இலக்கு ரூ.25 கோடி.

பி.ஜி. சரவணன்
சேர்மன்

**டெபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன!**

LDC **லக்ஷ்மி டிரேட் கிரெடிட்ஸ் லிமிடெட்**

கார்ப்பொரேட் அலுவலகம்:
37/1, கதீட்ரல் சாலை,
ஸ்டெல்லா மேரிஸ் கல்லூரி எதிரில்
சென்னை 600 086.
தொ.பே: 8281826/8281930

**கிளைகள்:** சென்னை • அம்பத்தூர், போன்: 681860 • அண்ணா நகர், போன்: 6212047 • குரோம்பேட்டை, போன்: 401267 • கே.கே. நகர், போன்: 4833917 • மடிப்பாக்கம், போன்: 2346586 • நங்கநல்லூர், போன்: 2348593 & 2346066 • விருகம்பாக்கம், போன்: 4830846 • மேற்கு மாம்பலம், போன்: 4830150 • திருச்சி, போன்: 25323 • மதுரை, போன்: 30626 • கோயம்புத்தூர், போன்: 43576 • திருநெல்வேலி, போன்: 322073 • காரைக்குடி, போன்: 2023 • வேலூர், போன்: 21902 • பாண்டிச்சேரி, போன்: 31859 • பெங்களூர், போன்: 366433.

***எல்டிசி: உங்கள் வாழ்வின் வளமைக்குப் பொன்னான பாதை.***

10.3.94 தேதியிட்ட ஹிந்து நாளிதழில் வெளியான 25.10.93 தேதியிட்ட சட்ட பூர்வமான விளம்பரத்தின் தொடர்ச்சி.

ADWAVE/LTC/4729 TAM A

பேசாமல் இருந்தான்.

"தெரியுமா விஷயம்? சனிக்கிழமை லீவு போட்டேனா. ரெண்டு நாள் ஹஸ்பென்டோட ஹாயா குற்றாலம்."

"வெறுப்பேத்தாதீங்க மேடம். இவ்விடம் நிலைமை சரியில்லை."

"அதென்ன!"

"ஒய்ஃபோட சின்ன சண்டை."

"கிழிஞ்சுது."

"அம்மா வீட்டுக்குப் போயிட்டா."

"எத்தனை நாள் முகாம்?"

"கிருஷ்ணா போன்" - யாரோ அலற பாய்ந்து போய், "ஹலோ!"

"நான்தான் கௌஸல்யா. வந்துட்டேன். ஸாரி. நேத்து என்ன செய்தீங்க? சாப்ட்டீங்களா?"

நெகிழ்ந்து போனான் கிருஷ்ணன். ஹுர்ரே.

"நானும் ஸாரி. என்ன இருந்தாலும் அடிச்சிருக்கக் கூடாது. முட்டாள் நான்."

"பரவாயில்லை. சீக்கிரம் வந்துடுங்க."

"தோ கிளம்பிட்டேன்!"

"ஐயோ அதுக்குள்ளயா? ஆபீஸ் முடிய இன்னும் நாலு மணி நேரம் இருக்கு?"

"ஹ! பெரிய ஆபீஸ். ஹெட் ஆபீஸ் போகணும், ஒரு ஸ்டேட்மெண்ட் குடுக்க. அப்படியே கம்பி நீட்டிற மாட்டேன்!"

சிரித்தாள். வைத்து விட்டாள்.

கிருஷ்ணன் உற்சாகமாய் சீட்டுக்கு வந்தான். அசுரவேகத்தில் பணிகளை முடித்தான். "பாலாமணி, டாட்டா. பெண்டாட்டி பேச்சு பழம் விட்டாச்சு!"

"லஞ்ச் முடிச்சுட்டுக் கிளம்பறதானே?"

"யாருக்கு வேணும் ஓட்டல் பொட்டலம்? அங்க என் பெண்டாட்டி வகை வகையா சமைச்சி வெச்சிருப்பா. வரட்டா? ஜூட்!"

அதிக சந்தோஷத்தில் ஆட்டோ பிடித்து ஹெட் ஆபீஸ் போய், அப்படியே வீடு திரும்பி-

பூட்டி இருந்தது. பக்கத்து வீட்டு மாமி, பால்கார்டு புதுப்பிக்கப் போயிருப்பதாகச் சொன்னாள்.

'சே' என்று படியில் உட்கார்ந்தான். பசி. தலைவலி. எரிச்சல்.

மணி ஒன்று.

மணி இரண்டு.

மணி மூன்று.

ஒரு சடன் பிரேக். ஒரு வீரியக் குலுக்கல். சட்டென்று ஆட்டோ நிற்க, பிரசன்னமானாள் கௌஸல்யா.

"வாடி, குயின் ஆஃப் இங்லண்டுக்குக் குறுக்கப் பிறந்தவளே! புருஷன் ஆபீஸ் விட்டு ரெண்டு மணி நேரமா ரோட்ல நிக்கறான், அம்மா உலா கிளம்பியாச்சு!"

கிருஷ்ணன் உக்கிரமாக எழுந்து நின்றான்.



# பாலம்

●● 1946 இல் "நேதாஜி" என்ற நூல் எழுதினேன். ஜோதி நிலையம் பிரசுரித்தது. பிறகு "தென்னாப்பிரிக்காவில் இந்தியர் போராட்டம்" என்ற நூலும் எழுதினேன். இந்த இரு நூல்களும் எனக்கு இப்போது மிக அவசரமாகத் தேவை. வைத்திருக்கும் அன்பர்கள் கொடுத்து உதவினால் நன்றியுடன் சன்மானம் தரவும் காத்திருக்கிறேன்.

- எஸ். எஸ். மாரிசாமி,
3, பிரதான முதல் தெரு,
ஷெனாய் நகர் (கிழக்கு),
சென்னை - 600 030.

●● சர்க்கரை உற்பத்தி குறித்து 1963 - 64 இல் நான் எழுதி, "விவசாய உலகம்" என்ற இதழில் வெளியான கட்டுரை ஓர் ஆய்வுக்காகத் தேவைப்படுகிறது. இதழ் அல்லது கட்டுரையின் ஜெராக்ஸ் அனுப்பினால் தக்க சன்மானமும் வழங்கக் காத்திருக்கிறேன்.

- ந. கைலாசம்,
43-ஏ, அரசு மருத்துவ மனை சாலை,
விழுப்புரம் - 605 602.

●● நான் துபாயில் பதினைந்து ஆண்டுகளாக இருக்கிறேன். தொழில் தொடங்க, சுற்றிப் பார்க்க, வேலை தேட விரும்பும் தமிழ் அன்பர்களுக்கு 3 மாதம், 10 நாட்களுக்கான (100 நாட்கள்) 'விசிட் விசா' எடுத்துத் தருகிறேன். தேவையுள்ளவர்கள் தொடர்பு கொள்ளவும்.

- H. Siddhiq Mohideen,
P. Box No. 1965,
Dubai. U.A.E.

●● ஒரு லட்சத்துக்குக் குறைவாகச் சொந்த வியாபாரம் செய்ய நினைப்பவர்களுடன் பார்ட்னராகச் சேர விரும்புகிறேன். நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள், என்ன வியாபாரம் என்று குறிப்பிட்டுக் கடிதம் எழுதவும்.

- அ. முஸ்தபா,
14/B/5, மசூதி தெரு,
தக்கோலம் - 631 151.

●● வாரியார் சுவாமிகள் மகாபாரதத்தில் சாந்தி பருவம், அநுசாசன பருவம் என்ற கட்டுரைகளை, 'திருப்புகழ் அமிர்த'த்தில் எழுதியிருக்கிறார்கள். எனக்கு பிரதி எடுத்து அனுப்புவதாகச் சென்னையில் இருந்த போது 24.2.91 இல் எழுதினார்கள். ஓய்வில்லாத அவருக்கு இதைச் செய்ய இயலவில்லை. யாராவது அன்பர்கள் வைத்திருந்து உதவினால் தக்க சன்மானம் உண்டு.

- புத்தகப்பித்தன்,
கங்கா - காவேரி,
17, காரியான்குடி தெரு,
வெளிப்பாளையம்,
நாகப்பட்டினம்
- 611 001.

●● சென்னைப் பல்கலைக்கழகம் அஞ்சல் வழிக் கல்வியில் இளங்கலை ஜியாகிரஃபி மூன்றாம் ஆண்டு பயில்கிறேன். முகவரி மாற்றம் காரணமாக இரண்டாம் ஆண்டு, மூன்றாம் ஆண்டு புத்தகங்கள் கிடைக்காமல் போயின. யாரிடமாவது இப்புவியியல் பாடப் புத்தகங்கள் மற்றும் நோட்ஸ் இருக்குமானால் (தமிழ் மீடியம்) கொடுத்து உதவவும். தக்க சன்மானம் உண்டு.

- ஆர். ஜெயதேவி,
W/o. ஏ. செல்வம்,
B-1414, இந்திரா நகர்,
லக்னோ, உ. பி.

●● எனது பாட்டனார் பிரும்மஸ்ரீ கோவிலூர் சேஷாசல சாஸ்திரியார் 1920 முதல் 1934 வரை பல இடங்களில் உபன்யாசம், கதா காலட்சேபம் செய்து, மிகப் பிரபலமாக இருந்தார். அவருடைய புகைப்படம் யாரிடமாவது இருந்தால் கொடுத்து உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

- K. P. S. Iyer,
"Tirupati" Apartments,
Flat B-34, 4th Floor,
Chinchpada Road,
Hanuman Nagar,
Kalyan East - 421 306.

●● தமிழகம் முழுவதிலுமுள்ள ஊர்களைப் பற்றி "தமிழக ஊர்க் களஞ்சியம்" என்ற தலைப்பில் ஆராய்ச்சி செய்கிறோம். உங்கள் ஊரைப் பற்றிய வரலாறு, பெருமைகள், வழிபடு நிலையங்கள் போன்ற விவரங்களை எங்களுக்கு எழுதுமாறு வேண்டுகிறோம்.

- உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்,
தமிழூர்,
அடைக்கலப்பட்டணம் (அஞ்)
- 627 808.
நெல்லை கட்டபொம்மன் (மாவ)

(பாலம் மூலம் தொடர்பு கொள்ளும் வாசகர்களின் வெற்றி தோல்விகளுக்குக் கல்கி நிறுவனம் பொறுப்பு ஏற்க இயலாது. - ஆர்.)

# இங்கே ஒரு ஜுராஸிக் சாகசம்!



• அருள்மூர்த்தி

'விஜயபிரதாபன்' படத்தில் இரட்டை முக ராட்சஸப் பறவையைப் பார்த்தவர்கள், 'அசத்திட்டாம்ப்பா!' என்று தியேட்டர் வாசலிலேயே பிரமித்தது, லாயிட்ஸ் சாலை எடிட் பாயின்ட்டைச் சேர்ந்த அருள் மூர்த்திக்கு நேரடியாகப் போய்ச் சேர வேண்டிய பாராட்டு.

"தெலுங்கில் பைரவ தீபம் எடுத்த போது என் திறமை அவர்களுக்கு முழுக்கத் தெரியாது. அது போலவே, அவர்கள் எத்தனை தூரம் என்னை உபயோகப்படுத்திக் கொள்வார்கள் என்பதும், எனக்குத் தெரியாது. படம் முடிய, 25 நாட்கள் இருக்கும் போது தான் நானும் இயக்குநர் சிங்கிதமும் உட்கார்ந்து பேசினோம். ட்ரிக் ஷாட்களில், விட்டலாசார்யா, பழைய முறைகளைக் கையாண்டார். கம்ப்யூட்டர் பக்கமே போகவில்லை. நாங்கள், நவீன இமேஜ் பிராசஸிங் முறையைக் கையாண்டோம். அதாவது, படம் எடுக்கப்பட்ட பிலிம் சுருள்களைக் கம்ப்யூட்டரில் செலுத்தி, பதிய வைத்து, பின் அதை நம் இஷ்டத்துக்கு வளர்த்துவது, நீட்டுவது, மடக்குவது. இந்த முறையில் டபிள் ஆக்டிங்கில், ஒருவரோடு ஒருவர் கைகுலுக்கக் கூட முடியும்!

"ஓரளவுக்கு ஹாலிவுட்டை எட்ட வேண்டும் என்ற ஆசையைத் தணித்துக் கொள்ளக் கிடைத்த வாய்ப்புத்தான் விஜயப் பிரதாபன்" என்கிறார் அருள்.

தண்ணீரில் இருந்து ஒரு பிம்பம் எழுந்து, அதுவே ஒரு ராட்சஸப் பறவையாக மாறி, பறந்து, ஹீரோவைத் தாக்கும். கடைசியில் அதனை ஹீரோ வீழ்த்துவதாக சீன். குறைந்தது ஐந்து நிமிடத்துக்கு மேல் ஓடும் இந்தக் காட்சி, பார்ப்பவர்களை ரத்தம் உறையச் செய்யும்! அந்தப் பறவையின் ஆக்ரோஷம், மிரளச் செய்யும்!

இது எப்படி சாத்தியமாயிற்று?

சொல்கிறார் அருள்மூர்த்தி :

"ஜுராஸிக் பார்க் டைனஸார்களை எப்படி உருவாக்கினார்களோ, அதே டெக்னிக்தான் இதுவும்.

"முதலில் தண்ணீரிலிருந்து ஒரு

• பயங்கர ஜந்து—





பறக்கும் குதிரை வீரன்...

அதையும் மேற்கூறியபடியே ஆட்ட, அசைக்க, பறக்க வைக்க முடியும்.

"ஆனால், இந்தத் தண்ணீர் பிம்பம், பறவையாக மாறும் அந்த Fraction of Second-ல் தான் 'Morphing' என்ற



• விஜயபிரதாபன் : நீ உருவிலிருந்து தண்ணீராக மாறும் வில்லன்

பிம்பம் எழ வேண்டும். அதற்கு, தண்ணீரின் தோற்றத்தை முதலில் கம்ப்யூட்டரில் வரைந்து கொண்டு, 'அண்டாகாகஸம்' மாதிரி, "நீ எழும்பு! ஆடு!" என்று ஆணையிட்டால் (சொன்னா போதாதுங்க! 'கமாண்ட்' இருக்குது அதுக்கெல்லாம்!) அதன்படி தண்ணீர் பிம்பம் எழுந்து சீறும்.

"பின், ஆர்ட் டைரக்டர் செய்து தந்த

ராட்சஸப் பறவை பொம்மையின் 'இமேஜை' கம்ப்யூட்டரில் செலுத்தி,



• கடலிலிருந்து எழுந்து வரும் தண்ணீர்





• வில்லன் தலை, வெட்ட, வெட்ட ஒட்டிக் கொள்கிறது...

சின்ன தொழில்நுட்ப உத்தியைச் செலுத்த வேண்டியிருந்தது" என்கிறார்.

விஜயபிரதாபனில் குருபியான பாலகிருஷ்ணா, அழகான ராஜகுமாரனாவதும் கம்ப்யூட்டர் வேலைதான்!

"பம்பாயில் கூட இத்தனை நவீன வசதி



"வடக்கே எல்லாம் போனியே... இந்தி பேச ரொம்பக் கஷ்டப் பட்டிருப்பியே...!"

"இல்லே...! என் இந்தியைப் புரிஞ்சுக்க அவங்கதான் ரொம்பக் கஷ்டப் பட்டாங்க....!"

– கார்த்திக் ராஜா



"டாக்டர், எனக்கு ஞாபக மறதி அதிகமாப் போச்சு..."

"அதனால பீஸை கொடுக்கறதுக்கு காசு எடுத்து வர மறந்துட்டேன்னு சொன்னா நான் விட்டுடுவேன்னு பாக்கறீங்களா!"

– காட்பாடி விஸ்வநாதன்.



ஆசிரியர்: "என்னங்க, இன்னைக்கு நம்ம பத்திரிக்கையில இரண்டு முழுப்பக்கங்கள் செய்திகள் ஏதும் இல்லாமல் வெறுமனே வெளியாயிருக்கு?"

உதவிஆசிரியர்: "கட்டாயம் யாராவது 'முதல்வர் வாழ்த்து' விளம்பரம் தருவாங்கன்னு ஒதுக்கி வைச்சிருந்தேங்க!"

– வீ.மனோஹரன்.

கிடையாது" என்றார் அருள்மூர்த்தி. வியப்புத்தான்!

அருள்மூர்த்தி பற்றி ஒரு அவசரக் குறிப்பு : அண்ணா பல்கலையில் கம்ப்யூட்டர் சயன்ஸ். சித்திரத் திறமை. கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் ஆர்வம்.

87-ல் என்.டி.ஆர். ஆட்சியில் 'லெசன்ஸ் த்ரு வீடியோ' என்று ஒரு வருடம் தெலுங்கு, கணிதம் கற்பித்த சாதனை. பிரசாத் வீடியோவில் இரண்டு வருடம். (ரீகல் சொட்டு நீலம், குமரன் சில்க்ஸ் - எடிட்டிங் பண்ணியதெல்லாம் இவரே.) அப்புறம் சிங்கப்பூர் வாசம். அங்கிருந்து அமெரிக்காவில் தொழில்நுட்பம் தேறி, மறுபடி சிங்கப்பூர்.

'சென்னையில் ஏன் ஒரு அலுவலகம் தொடங்கக் கூடாது?' என்ற சிந்தனை உதிக்க, உடனே விளைந்தது எடிட் பாயின்ட்!

**வி**ளம்பரப் படங்களில் ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ் சாதனை புரிந்தது, மெல்ல உற்சாகத்தைக் கிளப்பி விட, பலரும் "யார் இந்த அருள்?" என்று கேட்க ஆரம்பித்தார்கள். திரைப்படங்களில் நவீனமான ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ் செய்ய சிங்கீதம் சீனிவாசராவ் வாய்ப்புத் தந்தார்.

பழைய எடிட்டிங்கில் கட் பண்ணி, கட் பண்ணிச் சேர்ப்பார்கள். இப்போது ஆடியோ, வீடியோ இரண்டையும் AVID கம்ப்யூட்டரில் பதிவு செய்து விட்டு, கம்ப்யூட்டரிலேயே எடிட் செய்து விடும் வசதி இருக்கிறது.

கம்ப்யூட்டர் 'எட்ஜ் நம்பர்' பிரின்ட் பண்ணிக் கொடுத்து விடும். நாமே எடிட்டிங் செய்து விடலாம். நிறைய நேரம் மிச்சமாகும். ஒரு முழு பாட்டை எடிட் செய்ய சாதாரணமாக ஒரு நாள் ஆகும். இம்முறையில் 2 மணி நேரம்!

"வருங்காலப் படவுலகம் கம்ப்யூட்டரின் நவீன உத்திகளில்தான் இருக்கிறது!" என்னும் அருள்மூர்த்தியை ஸ்பீல்பெர்க்குக்குத் தெரிந்திருக்குமா?

— சாருகேசி



ராஜ்கோகுல்

"பாவிகள்! முப்பது வருஷத்துக்கு மேலா நான் என்னுடைய சம்பளத்திலே சேர்த்து வைத்த ஜி.பி.எஃப். பணத்தைத் திருப்பி வாங்குறதுக்கு இவன்களுக்கு லஞ்சம் கொடுக்கணுமாம். அயோக்கியப் பயல்கள்... எல்லாம் என் தப்புதான். இந்தப் பணம் கிடைச்சுடும்னு நம்பி மாப்பிள்ளைக்கு ஸ்கூட்டர் வாங்கித் தர்றதா ஒத்துக்கிட்டது என் தப்புதான்."

சுவரில் 'நங் நங்'கென்று தலையை மோதிக் கொள்ளலாம் போலத் தன் மீதே எரிச்சல் வந்தது, தணிகாசலத்துக்கு.

இதுவரை அவர் மோதி வந்த ஊர்கள், அலுவலகங்கள், மேல் அதிகாரிகள், காண்ட்ராக்டர்கள் எத்தனை எத்தனையோ! முப்பத்தைந்து வருடத்திற்குள் பத்தொன்பது ஊர்களைப் பார்த்துவிட்டார். ஒழுங்காக ஓர் ஊரில் இரண்டு வருடம் கூட குப்பை கொட்ட முடியாது அவரால்! காரணம்? வேறென்ன, அவரது கொள்கைதான். நேர்மை. பொதுவாழ்வில் அதுவும் அரசுப் பணியில் நூலிழை அளவு கூட நேர்மை பிறழக் கூடாது என்று அவரது தகப்பனார் சொல்லிவிட்டுப் போன வேதம்!

மேல் அதிகாரிகளை ஒத்துப்போக முடியாது. கணக்கைக் கூட்டி எழுதச் சொன்னால் முடியாதென்பார். 'நடக்காத வேலைக்கு எப்படி சார் பில் போடுவது?' என்பார். 'சொந்த வேலையாத்தானே சார் வெளியூர் போனீங்க? அதுக்கு எப்படி சார் டி.ஏ. கிளெய்ம் பண்ண முடியும்?' என்பார். இன்னும் ஒரு படி மேலே போய், தனக்கென்ன என்று இருக்காமல், இந்த அதிகாரி - இந்த தேதியில் - இவரிடம் இருந்து, இவ்வளவு தொகை கையூட்டுப் பெற்றார் என்று தம் சொந்தக் கையெழுத்தைப் போட்டுப் புகார் எழுதுவார். சொந்தக் காசைச் செலவழித்து முதலமைச்சரின் தனிப் பிரிவிற்குத் தந்தி அடிப்பார்.

என்ன செய்து என்ன?

அதிகாரி அப்படியே, அங்கேயேதான் நிம்மதியாக இருப்பார். இவர்தான் டிரான்ஸ்ஃபர் செய்யப்பட்டு, ஊர் ஊராக அலைவார். சில சமயம் குடும்பத்தைச் சொந்த கிராமத்தில் விட்டு, ஹோட்டல்களுக்கு அலைவார். ஹோட்டல் உணவு ஒத்துக் கொள்ளாமல் உடல் இளைத்து அவசரமாய் வீடு பார்த்து, பள்ளியில் சீட் வாங்கி குடும்பத்தைக் கொண்டு வருவார்.

எவ்வளவு நாளுக்கு?

- அடுத்த ஆறாவது மாதத்திலேயேதான் ஐயா தூக்கியடிக்கப்பட்டு விடுவாரே, அடுத்த மாவட்டத்துக்கு!

மிஞ்சியது என்ன?

- பெயர் மட்டும்தான். 'பிழைக்கத் தெரியாத மனுஷன்யா இந்தாளு' என்று.

கடந்த ஆறு வருஷமாகத்தான் தஞ்சையை அடுத்த சிறிய நகரத்தில் தொடர்ந்து பணிபுரிகிறார். கிட்டத்தட்ட அவரைப் போலவே கொள்கையுடையவர் ஒருவர் மேலதிகாரியாக வாய்த்ததுதான் அதன் ரகசியம்.

பெரியவள் மீனாட்சியைப் பட்டதாரியாக்கி, மாப்பிள்ளையும் பேசிவிட்டார். லேட்டாய்ப் பிறந்த மகன்கள் இருவரும் பள்ளியில் படிக்கிறார்கள். இன்னும் இரண்டு வருடத்தில் ஓய்வு பெறப் போகிறார் - ஹெட்கிளார்க்காகவே!

மணி பார்த்தார் - 11.30.

காலையிலிருந்து இன்னும் சாப்பிடவில்லை. ஹோட்டல் தேடிப் போய்ச் சாப்பிடும் மனநிலை இல்லை.

மீனாட்சிக்கு என்ன அழகு இருந்து என்ன புண்ணியம்? பிறந்தது மூல நட்சத்திர

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் வென்ற மூன்றாம் பரிசுக் கதை - 1



மாய்ப் போய்விட்டதே! மாப்பிள்ளை தேடுவதே பெரிய வேலை. இதில் தகப்பனார் செத்துப் போன மாப்பிள்ளையாகப் பார்த்துத் தேடுவதென்றால் சாமானியப்பட்ட வேலையா என்ன? அப்படிப் பிடித்த ஐந்தாறு இடங்களும் தகையாமல் தட்டிக்கொண்டு போக, வயதென்னவோ தாமதிக்காமல் வருஷத்துக்கொன்றாய் ஏறி, இருபத்தாறைத் தொட்டுவிட்டது.

கடைசியாய்த்தான் இந்த வரன் வந்தது. அவர்களுக்கும் எடுத்த எடுப்பிலேயே பெண்ணைப் பிடித்துவிட்டது. எப்படியாவது இந்த இடத்தை முடித்து விடுவதென்று முடிவே செய்துவிட்டார்கள் தணிகாசலமும், பங்கஜமும்!

நல்லவேளையாக, நகை நட்டெல்லாம் இவர்கள் செய்ய நினைத்ததைவிடக் கொஞ்சம்தான் அதிகமாகக் கேட்டார்கள். சரியென்று ஒத்துக் கொண்டார்கள். "மாப்பிள்ளைக்கு ஒரு ஸ்கூட்டர் வாங்கித் தரணும்னு எதிர்பார்க்கிறாங்க..." என்று தரகர் இழுத்த போதுதான் சுருக்கென்றது.

ஆனால் யோசிக்க இது நேரமில்லை.

யோசிக்கும் நேரத்தில் இந்த இடமும்

கைநழுவி விட்டால், இன்னும் வேறு எங்கே போய்த் தேடுவது...?

ஒத்துக் கொண்டு விட்டார். பிள்ளைகளின் மேற் படிப்புக்கு என்று நினைத்திருந்த ஜிபிஎஃப் பணத்தைக் கணக்குப் போட்டுத் தரகரிடம் 'ஓ.கே.' சொல்லி அனுப்பி விட்டார்.

ஆனால் இப்போது கருவூலக்காரர்கள் 'போய்யா முடியாதெ'ன்று மறுக்கிறார்களே!

சொன்ன வார்த்தையைக் காப்பாற்றாமல் விட்டுவிட முடியுமா...?

இந்த ஒரு தடவை மட்டும் கொள்கையைக் கொஞ்சம் தளர்த்திக் கொள்ளலாமா? ஐம்பது ரூபாயைப் பிச்சைக்காரனுக்கு, ஒரு குஷ்டரோகக்காரனுக்கு கொடுத்தாற்போல நினைத்து வீசிவிட்டு, பணத்தை வாங்கிவிடலாமா...?

"சே! ஏன் புத்தி இப்படிப் போகுது...?"

தலையை ஆட்டிச் சிலிர்த்துக் கொண்டார். விரல்களை மடக்கி, தலையில் 'நங், நங்' என்று குட்டிக் கொண்டார். ஆவேசத்தில் குட்டுகள் வேகமாக இறங்கிவிட, அதிகமாகவே வலித்தது. தடவி விட்டுக் கொண்டார்.

'ஆனால், கல்யாணத்துக்கு முதல் நாள் எப்படியாவது புது ஸ்கூட்டரைக் கொண்டு போய்ப் பளபளவென்று மாப்பிள்ளை முன்னே நிறுத்தியாக வேண்டுமே...? எப்படி? எப்படி? அப்படி முடியாமல் போய்விட்டால்...?'

"சார்... சார்..." கதவைத் தட்டினான் கஜபதி. ப்யூன். முன்னதாக, தணிகாசலம்தான் அவனைக் கருவூல ஆபீஸுக்கு அனுப்பியிருந்தார், 'நிலைமை'யைப் பார்த்துவர.

தணிகாசலம் விழித்துக் கொண்டார். இரவு சரியாகத் தூங்காத அயர்ச்சியில், உட்கார்ந்தபடியே கண்ணயர்ந்து விட்டிருக்கிறார்.

அவசரமாய் எழுந்து போய்க் கதவைத் திறந்தார்.

நெற்றி வியர்த்திருந்தது.

"திரும்பவும் கருவூல ஆபீஸுக்குப் போனேன் ஸார். எஸ்.டி.ஓ.வையே பார்த்தேன். மனுஷன் ஒரே காட்டமாப் பேசறார் சார்... 'யார் பில்லுய்யா இது? சி. எம். 'செல்'லுக்கெல்லாம் தந்தி குடுத்து, முந்தி இங்கிருந்த ஸ்டாஃபை எல்லாம் திண்டிவனத்துக்கு டிரான்ஸ்ஃபர் பண்ணாரே... அந்த ஆளு பில்லுதானே...? போய்ச் சொல்லு போ... அவருக்கிட்டேயே - லஞ்சம் வாங்கிக் காட்டறேன்னு போய்ச் சொல்லு. நூறு ரூபாய்க் காசு இல்லாம இந்த பில்லு ஒரு மில்லிமீட்டர் கூட நகராதுன்னு போய்ச் சொல்லு'ன்னு கத்தறார் சார்..."

ஒன்றும் பேசாமல் கஜபதியை நிமிர்ந்து பார்த்தார். அந்த நிலையிலும் அவர் முகத்தில் ஒரு லேசான புன்னகை. வெற்றிப் புன்னகை! ஆம்! அவர் நடத்திய போராட்டங்களிலேயே அது ஒன்றில்தான் அவருக்கு வெற்றி கிட்டியது என்று சொல்ல வேண்டும்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் இதேபோல அவரது மேலதிகாரியின் ஒரு பில்லுக்கு லஞ்சம் கொடுத்தால்தான் ஆயிற்று என்று ஆடிட் மேல் ஆடிட் போட்டுத் திருப்பி அனுப்ப, தணிகாசலம் உடனே, 'வேண்டுமென்றே தேவையில்லாத ஆட்சேபணைகளை எழுப்பி மறுப்புச் செய்கிறார்கள்' என்று ஆதாரத்தோடு கவர்னர், சி. எம். எல்லோருக்கும் புகார் எழுதி, சி. எம். 'செல்'லுக்குத் தந்தி கொடுத்து, ஏக அமர்க்களம் பண்ணிவிட்டார். அடுத்த மாதமே ஆபீசில் வேலை பார்த்த எல்லோருமே கூண்டோடு டிரான்ஸ்ஃபர் செய்யப் பட்டார்கள். இருந்தும் என்ன, இப்போது அந்த ஊரிலே போய் அன்பளிப்பைக் கரந்து கொண்டுதான் இருப்பார்கள்.

"ஒன்றரை மணி வரைக்கும் டைம் கொடுத்திருக்கார்



"நான் பீச்சல வச்சுதான் பத்திரிகைக்குத் துணுக்கு எழுதி அனுப்புவேன்! பிரமாதமா கற்பனை வரும்!"

"அதுக்காக 'கண்டல் பிரியன்'கிற புனைபெயர்ல எழுதி அனுப்பறது கொஞ்சம் கூட நல்லா இல்லே!"

- எஸ். முகம்மது யூசுப்



" 'லஞ்சப் பணத்'தில் டி.வி. வாங்காதீங்கன்னு படிச்சுப் படிச்சுச் சொன்னேன், கேட்டீங்களா?"

"ஏன் என்னாச்சு?"

"இப்பப் பாருங்க, டி.வி. மேலே ஏதாவது சம்திங் வெச்சாத்தான் படமே தெரியுது!"

- கோ. வீ. இராஜேந்திரன்

# பித்ருக்களுக்கு சிராத்தம் ஏன்? அவசியம் செய்ய வேண்டும்



சிராத்தம் போன்ற சடங்குகள் உண்மையில் பிராண ஜீவனுக்காகவே செய்யப்படுகின்றன. ஜீவனுடைய பிராண அதிர்வுகள் அதைப் பிராண லோகங்களுடன் அல்லது பூலோகத்துடன் தளைப்படுத்துகின்றன. அந்த அதிர்வுகளை நீக்குவதற்கு இந்த சடங்குகள் ஜீவனுக்கு உதவுகின்றன. இதனால் ஜீவன் சைத்திய சாந்தத்தில் ஓய்வெடுக்க விரைவாகச் செல்வது இயலும்.

—ஆதாரம் வைகறை 1991-92



இத்துடன் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோர்களுக்கு விநியோகம் செய்யவும்.

**திருமண வைபவங்களுக்கு:**

சீர் முறுக்கு, சீர் அதிரசம், திரட்டுப் பால், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய், அப்பம் வகைகள் முதலியவைச் செய்துத் தரப்படும்.

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

நெ. 24, 2வது மெயின் ரோடு
காந்தி நகர்
அடையாறு
சென்னை-20.
போன்: 412557

சார். ஐம்பது ரூபாயைக் கொடுத்துத் தொலைச்சா உடனே பணத்தை வாங்கிட லாம் சார்..." கஜபதி நைசாகச் சொல்லிப் பார்த்தான்.

"சரி சரி, நீ போயிட்டு வா, பார்த்துக்க லாம்..."

'டைம் கொடுக்கிறானாம் டைம்! நான் ஏன் கொடுக்கனும் லஞ்சம்? என் பணத் தைக் கொடுக்க மாட்டேன்னு சொல்ல இவன் யாரு...?'

'அப்படின்னா ஸ்கூட்டர் வாங்கிக் கொடுக்கிறது லஞ்சம் இல்லையா...?'

'மாப்பிள்ளைக்கு வரதட்சணை கொடுக் கிறது மட்டும் லஞ்சம் இல்லையா...?'

'ஆமா... அதுவும் லஞ்சம்தான். நான் கொடுக்க மாட்டேன்... ஆனால் வாக்குக் கொடுத்துட்டேனே...!'

'வாக்குக் கொடுத்துட்டா மட்டும் லஞ்சம் கொடுக்கலாமா...?'

கூடாதுதான்... மாட்டேன், நான் குடுக்க மாட்டேன்... ஆனா மூலநட்சத்திரப் பெண் ணுக்குத் திரும்பவும் வேற மாப்பிள்ளை...?"

'அதனாலே...?'

'இல்லே... கொடுக்க மாட்டேன். வேற மாப்பிள்ளை கிடைக்காமலா போயிடு வான்...? ஸ்கூட்டர் கிடையாது... இஷ்ட மிருந்தாப் பண்ணிக்கட்டும். இன்ஸ்பெக் டரே வரதட்சணை கேட்கலாமா...? இருக் கட்டும், மாட்டி விட்டுடறேன்...'

அவசரமாகத் துணிகளை அள்ளி சூட் கேஸில் அடைத்துக் கொண்டார். விருட் டென்று பயணப்பட்டு விட்டார் மதுரை நோக்கி.

உடனே தஞ்சாவூர் பஸ் கிடைத்தது.

தஞ்சாவூர் பஸ், ஸ்டாண்டில் இறங்கிய போது அவரது மனது குழம்பிக் கிடந்தது. முகம் முழுவதும் வழிந்த எண்ணெயில் சோர்வு அப்பியிருந்தது.

பஸ்ஸ்டாண்ட் உள்ளேயே இருந்த போலீஸ் அவுட் போஸ்டில் சில போலீஸ் காரர்கள் நின்றிருந்தார்கள் -

தணிகாசலத்தின் மூளையில் ஒரு பளீர் மின்னல்!

'யார் அந்தப் போலீஸ்காரர்? எங்கேயோ... அட, மாப்பிள்ளை மாதிரியில்லே...?'

அவசரமாக எழுந்து நடந்து அருகே போனார்.

'அவரா இவர்...? வேறு யாராவது இருக் குமோ...? ஒரே முறை பார்த்தது... அதுவும் சுத்தமாய் வெள்ளை வேட்டிச் சட்டையில். இப்போது கம்பீரமாக யூனிஃபார்மில்... அவர்தானோ...?'

இன்னும் கொஞ்சம் நெருங்க, அவரும் இவரைப் பார்த்துவிட... அவருக்கும் அதே மாதிரி உணர்வுகள்... சந்தேகங்கள்!

"அடடே... மாமா... சார்... நீங்களா? என்ன இங்கே?"

"ஆமாங்க தம்பி! மதுரை போயிட்டிருக் கேன். நீங்க எப்படி இங்கே?"

"மினிஸ்டர் டூர் புரோகிராம். உலகத் தமிழ் மாநாட்டு ஏற்பாடுகளைப் [illegible] றார். ஸ்பெஷல் டூட்டி போட்டிருக்காங்க..."

"இப்போ டூட்டிலே இருக்கீங்களா...?"

"ஆமாம்...!"

"ஒரு பத்து நிமிஷம் வர முடியுமா...? பேச ணும்..."

"ஓ.யெஸ்! இதோ வந்துடறேன்..." இன் னொரு யூனிஃபார்மிடம் ஏதோ சொல்லி விட்டு வந்தார்.

அருகில் இருந்த ஹோட்டலில் அதிகக் கூட்டமில்லை. எதிர் எதிரே அமர்ந்தார்கள்.

தயங்கியபடியே சொல்ல ஆரம்பித்தார். சுருக்கமாக, அதே சமயத்தில் முழுக் கதை யையும் சொல்லி முடித்தார்.

"இவ்வளவுதானா...? ஸ்கூட்டர் நான் கேட் கலியே மாமா? வர்ற மாப்பிள்ளைக்காகத் தயாரா வாங்கி வைச்சுக்கிட்டு ஸ்கூட்ட ரோட நீங்க வெயிட் பண்றதா அந்தத் தரகர் சொன்னதாலே, சரின்னு சொன்னோம்..."

"அடப்பாவி! தரகர் வேலையைக் காண் பிச்சுட்டாரே! நீங்க ஆசைப்பட்டுக் கேட் டதா இல்லே எங்கிட்டே வந்து சொன்னார்..."

தணிகாசலத்தின் முகத்தில் மலர்ச்சி அரும்ப ஆரம்பித்தது. கவலையும் சோர்வும் பறக்க ஆரம்பித்தன.

"அப்படின்னா ஸ்கூட்டர்...?"

"அதுக்கு இப்போ அவசரமில்லே மாமா. கல்யாணம் முடியட்டும். அப்புறமா உங்க ளுக்கு வரவேண்டிய பணத்தை வாங்கி, ஸ்கூட்டர் வாங்கிடுவோம்..."

'அப்படின்னா இவர் ஸ்கூட்டர் வேண் டாம்னு சொல்லலியா?'

"சரிதானே மாமா? கல்யாணத்தை முடிச் சுட்டு அடுத்த வாரம் நேரே திரும்பி வர் றோம்... அந்த ஆபீஸுக்குப் போய் லஞ்சப் பணத்தைக் கொடுக்கறீங்க...!"

"என்ன தம்பி சொல்றீங்க...? நான் போய் லஞ்சம் கொடுக்கனுமா...?"

"இந்த ஏரியா லஞ்ச ஊழல் தடுப்பு அதி காரி என்னோட நண்பர்தான் மாமா. அந்த ஆபீஸையே புடிச்சு உள்ளே போடுவோம். உங்க பணத்தை வாங்கி ஸ்கூட்டர் வாங்கிடு வோம்..."

'ஸ்கூட்டரை விடமாட்டார் போலிருக் கிறாரே, தம்பி...'

"ஸ்கூட்டர் எனக்கில்லே மாமா! உங்களுக் குத்தான்! மீனா சொன்னாளே! இல்லே, மீனாட்சி - உங்க மகள்... சொன்னாங்களே... நீங்க வயசான காலத்திலே சைக்கிள் மிதிச்சுக் கஷ்டப்படறீங்கன்னு... ஸ்கூட்டர் உங்களுக்குத்தான் வாங்கப் போறோம்... எனக் குத்தான் அரசாங்கம் கொடுத்த புல்லட் இருக்கே..."

'அதுக்குள்ளே திருட்டுத்தனமா மீனாவை எங்கே சந்திச்சுப் பேசினார் இந்தத் தம்பி...?'

சர்வர் வந்து நிற்க, "புதுசா ரெண்டு ஸ்வீட்" என்று மலர்ச்சியுடன் ஆர்டர் கொடுத்தார் தணிகாசலம்.

4 கிராம் புத்திசாலித்தனம்



1 தேக்கரண்டி கற்பனைசக்தி



2 கோப்பை நூதன படைப்பு



1 சிட்டிகை ஆர்வம்

# ORKAY®

# AUR KYA?

## CONTEST

## மலாய் கோஃப்த்தா, காரட் ஹல்வா, முந்திரி பர்ஃபி, சாஹி பக்கோடா... இன்னும் எத்தனை வகைகள் ஆர்கே குலாப் ஜாமூன் மிக்ஸிலிருந்து தயாரிக்க முடியும்?

நீங்களே செய்து பார்த்துவிட்டீர்கள். நீங்களே சுவைத்து சாப்பிட்டுவிட்டீர்கள். அந்த அதிசயத்தக்க நூதன பிரமிப்பூட்டும் ஆர்கே குலாப் ஜாமூன் மிக்ஸ் சாதனைகளே – அந்த நம்பமுடியாத சுவைமிக்க மலாய் கோஃப்தா.. அந்த தெவிட்டாத புஷ்டியான இனிய காரட் ஹல்வா..

உங்கள் கற்பனை குதிரையை தட்டிவிடுங்கள். ஆர்கே குலாப் ஜாமூன் மிக்ஸுடன் பறந்து மாயாஜால படைப்புகளை பொழியுங்கள். நீங்களும் ஆர்கே குலாப் ஜாமூன் மிக்ஸில் சேர்த்தால் மனம் கவர்ந்த படைப்புகளுக்கு ஏது பஞ்சம்! ஏது தடை!

உங்கள் படைப்புகளை, திறன்மிக்க குறிப்புகளை விரைந்து அனுப்புங்கள் (டிரேட்மார்க் இல்லையேல்) ரகசியத் தயாரிப்புகளை முன்னம் சுவைத்திராத, திகட்டாத வாயில் நீர் ஊறும் பிரமிப்பூட்டும் படைப்புகள் உங்களை இந்த மாத ஆர்கே மின் திறன்மிக்க சமையல் கலைவல்லுனராக தேர்ந்தெடுக்க வைக்கட்டுமே!

**பரிசுத்திட்ட விதிகள்:**

- ஆர்கே இன்ஸ்டண்ட் ஃபுட்ஸ், ஆர்கே கலாமிப்ரீ பி டி ஓ இந்த நிறுவனங்களில் வேலை செய்பவர்களும், அவர்களுடன் சம்பந்தப்பட்டவர்களும், அவர்களுடைய குடும்பத்தினரும் இந்தப்பரிசுத் திட்டத்தில் கலந்து கொள்ள முடியாது.
- உங்கள் பரிசுத்திட்ட விண்ணப்பங்களை சாதாரண தபால்மூலம் மட்டுமே குறிப்பிட்டுள்ள தபால் எண்ணுக்கு அனுப்புங்கள். குறைந்த தபால் தலைகளை ஒட்டி அனுப்பிய விண்ணப்பங்களை ஏற்றுக்கொள்ள முடியாது.
- வழியில் காணாமற்போன அல்லது பழுதான விண்ணப்பங்களுக்கு நாங்கள் பொறுப்பேற்றுக்கொள்ள முடியாது.
- பரிசுதாரர்களுக்கு ரிஜிஸ்டர் தபால் மூலம் தகவல் அனுப்பப்படும்.
- எத்தனை விண்ணப்பங்கள் வேண்டுமானாலும் நீங்கள் அனுப்பலாம்.
- நீங்கள் அனுப்பிய சமையல் குறிப்புகளை உபயோகித்து வெற்றிகரமான தயாரிக்க முடிந்த குறிப்புகளில், எங்கள் நீதிமன்ற நடுவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட குறிப்புகள் பரிசுக்காக எடுத்துக்கொள்ளப்படும் நீதிபதிகளின் தீர்ப்பே முடிவானது.
- நீங்கள் அனுப்பிய தேர்ந்தெடுக்கப்படாத குறிப்புகளைப்பற்றிய எந்தவிதமான விசாரணைகளையும் ஏற்றுக்கொள்ளமுடியாது.
- தேர்ந்தெடுக்கப்பட்ட விண்ணப்பங்கள், குறிப்புகள் யாவையும் ஆர்கே இன்ஸ்டண்ட் ஃபுட்ஸ் பிரைவேட் லிமிடெட்டுடைய உடைமைகளாகும்.

**முந்துங்கள்!** போட்டி முடிவு தேதி 15, செப்டெம்பர் 1994
உங்களது நுழைவுத்தாளே ஸ்ரீ ராமகிருஷ்ணா
டையரி பி.லிட். P.B. No. 492,
பெங்களூர்– 560 004க்கு அனுப்புங்கள்



**முதல் பரிசு ரூ 5000/–**
**2 – ஆம் பரிசு ரூ 2500/–**
**3 – ஆம் பரிசு ரூ 1000/–**
**மேலும் 50 ஆறுதல் பரிசுகள்**



# ஆர்கே®

இன்ஸ்டண்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ்

# 9

ராஜாராமன் விழிகள் சற்றே விரிய அமர்ந்திருந்ததை அமராவதியும் நரேந்திரநாத் பானர்ஜியும் ஒருசேரப் பார்த்தார்கள்.

"என்னப்பா பார்க்கறேள்? இவர் பேரு எனக்குத் தெரியாது. ஆனா ஆளைத் தெரியும்" என்றாள் அமராவதி.

"என்னம்மா சொல்றே நீ? ஆளைத் தெரியும், ஆனா பேரு தெரிலைங்கறே?"

அவர்களின் உரையாடலின் சாரத்தைப் புரிந்து கொண்ட சிரிப்புடன், "அன்று நடந்ததை நீங்கள் வீட்டில் தெரிவிக்கவே இல்லையா என்ன?" என்றான் அவன் வியப்புடன்.

குரலைத் தாழ்த்திக் கொண்ட அமராவதி, "இல்லை. சொல்லவில்லை. சொன்னால் கவலைப்படுவார்கள் என்பதால்தான்" என்றாள்.

இதனால் மேலும் திகைப்படைந்த ராஜாராமன், "என்ன சொல்றே நீ, அமராவதி? என்ன நடந்தது கவலைப்படும்படியா?" என்றார்.

"சொல்றேம்ப்பா... இனிமே மறைக்க முடியாது. சொல்லிடறேன். அம்மா இப்ப இங்க வரமாட்டாதானே?"

"இல்லே. இப்போதைக்கு வரமாட்டா. பாயசம் பண்றதுல பிஸியா இருக்கா."

"பாயசமா? என்ன விசேஷம்?"

"நரேந்திரநாத் பானர்ஜி இன்னிக்கு நம்மாத்துல சாப்பிடறான்."

"ஓ. உங்கள் பெயர் நரேந்திரநாத் பானர்ஜியா?"

"ஆமாம். உங்கள் பெயர்?"

"என் பெயர் அமராவதி. அப்பாவை உங்களுக்கு ஏற்கெனவே தெரியுமா?"

"இன்றைக்குத்தான் ஒருவர்க்கொருவர் அறிமுகம் செய்து கொண்டோம். லண்டனில் படித்துக் கொண்டிருக்கும் என் மூத்த சகோதரன் இந்திரநாத் பானர்ஜியும் உங்கள் அண்ணா அருணாசலமும் நண்பர்கள். ஒரு செய்தி சொல்லும்படி என் அண்ணா எனக்கு எழுதி இருந்தான். அதைச் சொல்லுவதற்குத்தான் வந்தேன்."

அமராவதி பரபரப்படைந்து "என்ன செய்தி கொண்டு வந்தீர்கள்?" என்று வினவினாள்.

அவன் விவரித்தான். கேட்டுக் கொண்டிருக்கையிலேயே அவள் விழிகளில் நீர் படர்ந்தது.

## ஜோதிர்லதா கிரிஜா

"அமராவதி, இத பாரு. உங்கம்மா திடீர்னு இங்க வந்து நின்னு என்ன, ஏதுன்னு கேக்கறதுக்கு முந்தி கண்ணைத் தொடச்சுக்கோம்மா. நான் அவகிட்ட எதுவும் சொல்றதா இல்லே... அப்புறம் உடைஞ்சு போயிடுவா."

அமராவதி கண்களைக் கைக்குட்டையால் ஒற்றிக் கொள்கையில்.. "அதுசரி, உங்களுக்குள் எப்படி இதற்கு முன்னால் அறிமுகம் ஏற்பட்டது என்பதை இன்னும் நீங்கள் சொல்லவே இல்லையே" என்று கேட்டார் ராஜாராமன்.

"இரண்டு நாட்களுக்கு முன்னால் நான் ஜார்ஜ்டவுனுக்குப் போயிருந்தேன், அப்பா! கடை வீதியில் நடந்து கொண்டிருந்த போது, ஒரு வெள்ளைக்காரன் நன்றாய்க் குடித்திருந்தான் - அவன் பக்கா வெள்ளைக்காரனாக இல்லாமல், ஓர் ஆங்கிலோ இந்தியனாகவும் இருக்கக்கூடும் – என்னை வழிமறித்ததோடு என் கையைப் பிடித்து இழுத்தான். தெருவில்

நடந்து கொண்டிருந்த சிலர் திகைத்துப் போய்ப் பார்த்தார்களே தவிர, சிலைகளாய் நின்று கொண்டிருந்தார்கள். அப்போது மோட்டார்சைக்கிளில் அந்தப் பக்கம் வந்த மிஸ்டர் நரேந்திரநாத்தான் அவன் கையை முறுக்கி என்னை விடுவித்ததோடு அவன் கன்னத்திலும் நாலு விட்டார். அதன் பிறகு என்னைத் தமது சைக்கிளின் பின்னிருக் கையில் அமர்த்தி, சென்ட்ரல் வரை அழைத் துப் போனார்.

"என்ன திமிர் அந்த ஆங்கிலோ இந்திய னுக்கு!- இவ்வளவு நடந்திருக்கிறது. நீ வீட்டில் மூச்சு விடவில்லை. என்னிடமாவது சொல்ல வேண்டாமா?"

அமராவதி பேசாதிருந்தாள்.

"இவ்வளவு உதவி செய்தவனுடைய பெயரைக் கூட நீ கேட்டுத் தெரிந்து கொள்ள வில்லை. படித்து என்ன பிரயோசனம்?"

"சேச்சே. அப்படியெல்லாம் சொல்லா தீர்கள். அப்படி ஒரு நிலைக்கு ஆட்பட்ட பெண் எத்தனை மனக் கலக்கம், அச்சம், கூச்சம், அவமானம், ஆத்திரம் போன்ற பல் வேறு உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு ஆளாகி இருந்திருப்பாள் என்பதை நீங்கள் நினைத்துப் பார்க்கவேண்டும்!" என்றார் நரேந்திரநாத்.

அப்போது வாசற்புறத்திலிருந்து கார் ஹாரன் ஓசை கேட்டது.

''காரை எடுத்துண்டு யாருப்பா வெளியில போனது?''

''அஞ்சனாதான்.''

''எங்கே போயிருந்தா?''

''ராமசாமின்னு ஒரு காங்கிரஸ்கார்ர். மெட்ராஸ்ல கொஞ்சம் உருப்படியான காரி யங்கள் செய்யறதுல ஆர்வமுள்ளவர். அவ ரையும் நம்ம இயக்கத்துல கூட்டுச் சேர்த் துக்கலாமான்னு நோட்டம் பார்க்கிறதுக் காகப் போயிருந்தா... அவ, அவர் வீட்டுக்குப் போயிருந்த நேரம் பார்த்து அவரோட வீட்டைச் சோதனை போடப் போலீஸ்காரன் வந்துட்டானாம். அதோ அவளே வந்துட்டா. வாம்மா, அஞ்சனா...''

**வி**டுவிடுவென்று உள்ளே வந்த அஞ்ச னாவின் விரைவு நரேந்திரநாத் பானர்ஜியைப் பார்த்ததும் சற்றே மட்டுப்பட்டது.






ஹிந்து 26.07.94 தேதியிட்ட நாளிதழில் 17 ஆம் பக்கத்தில், அ. இ. அ. தி. மு. க. மாணவர்கள் சங்கச் செயலர் வெளியிட்ட விளம்பரத்தில் தமிழக முதலமைச்சரை வர்ணித்து 'The Enigmatic Leadership' என்று காணப்படுகிறது. இதற்கு அர்த்தம் 'புரியாத' அல்லது 'புதிரான' தலைமை என்பது!

- இரா. வேங்கடசுப்பிரமணியம்

மெழுகுவர்த்தியை உபயோகிக்கும் முன் சிறிதளவு உப்பை எடுத்து அதில் சில மணி நேரங்கள் மெழுகுவர்த்தியைப் புதைத்து வைத்துவிட்டு, மீண்டும் வெளியே எடுத்துப் பற்ற வைத்தால் நீண்ட நேரம் எரியும். சீக்கிரம் உருகவும் உருகாது. வெளிச்சம் பளிச்சென்று இருக்கும்! செய்து பாருங்களேன்!

– ஆர். ஆர். பூபதி



"இவள் என்னுடைய மூத்த மகள், அஞ்சனா தேவி. அருணாசலத்துக்கு அடுத்தாற்போல் பிறந்த இரட்டைக் குழந்தை என்று சொன்னேனே, அவள். இது மிஸ்டர் நரேந்திரநாத் பானர்ஜி. இவனுடைய அண்ணாவும் லண்டனில் படித்துக் கொண்டிருக்கிறானாம். அருணாசலத்துடைய நண்பனாம். சேதி சொல்லியனுப்பி இருக்கிறான்.

"நல்ல செய்திதானே?" என்று நரேந்திர நாத் பானர்ஜியைப் பார்த்து வினவியவாறு அஞ்சனா ஒரு நாற்காலியில் அமர்ந்தாள்.

நரேந்திரநாத் சுருக்கமாய் அவளுக்காக ஒரு தரம் தான் கொண்டு வந்த செய்தியைச் சொன்னான். அஞ்சனாவின் கண்கள் பொங்காவிட்டாலும், அவள் முகம் நொடியில் மாறிப் போய் விட்டது. கண்களில் அச்சமும், துயரமும் ஒருங்கே தோன்றின.

"கவலைப்படாதீர்கள், மிஸ் அஞ்சனா தேவி. லண்டன் இந்தியா ஹவுஸ் ஹாஸ்டல் தேசபக்த மாணவர்கள் அனைவருமே கெட்டிக்காரர்கள். எப்படியாவது தப்பி விடுவார்கள். மேலும் பாரீஸில் மேடம் காமாவின் ஆட்கள் இருப்பதால் உங்கள் அண்ணாவுக்கு எந்த ஆபத்தும் வராது. அவரை அந்த ஆட்கள் கவனித்துக் கொள்ளுவார்கள். அடுத்த தகவல் கூடிய சீக்கிரம் நமக்கு வந்து சேரும்...."

"வரும் தகவல் எதுவானாலும், அது உங்கள் மூலந்தான் எங்களுக்கு வந்துசேருமா, மிஸ்டர் நரேந்திரநாத்? நாங்கள் உங்கள் அண்ணாவுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு தகவல் பெற முடியாதா?"

"அது இங்கு வாழும் உங்களுக்கும் சரி, லண்டனில் இருக்கும் அண்ணாவுக்கும் சரி, ஆபத்தாக முடியலாம்."

சற்றுநேர மௌனத்துக்குப் பிறகு, அதைக் கலைப்பதுபோல, "அதுசரி, உன் கதை என்ன? ராமசாமி என்ன சொன்னார்?" என்று கேட்டார் ராஜாராமன்.

அஞ்சனாதேவி ராமசாமியுடனான தனது சந்திப்பு, காவல் துறையினர் அவரது வீட்டுக்கு வந்து திடீர்ச் சோதனை செய்தது, கூட்டத்தை இரத்துச் செய்த தகவலை அவருடைய தோழர்களுக்குத் தெரிவிக்கச் சென்று விட்டு வந்துள்ளது வரையில் தெரிவித்தாள். பிறகு, "உங்கள் அண்ணாவிடமிருந்து எப்போ கடிதம் வரும்? ஒரு வேளை அது தவறி, அதிகாரிகளிடம் சிக்கி விட்டால்!" என்று கவலையோடு கேட்டாள்.

"மறைமுகமான தந்திரச் சொற்களைக் கண்டுபிடிக்கும் முயற்சியில் என் அண்ணா ஈடுபட்டிருக்கிறான். மேலெழுத்துவாரியாகக்

கடிதத்தைப் படிக்கும் யாருக்கும் அது ஒரு சாதாரணக் குடும்பக் கடிதம் மாதிரிதான் தெரியும். ஆனால் தந்திரவழியைப் புரிந்து கொண்டவர்களுக்கு அதன் பொருள் வித்தியாசமாகப்படும். நாமும் அதைப் புரிந்து கொண்ட பிறகு அதே முறையில் லண்டன்காரர்களுக்குப் பதில் எழுதியனுப்பலாம். யாருக்கும் எந்தச் சந்தேகமும் வராது."

"உங்கள் இயக்கத்துக்கெல்லாம் ரொம்பப் பணம் தேவைப்படுமே; அதற்கெல்லாம் என்ன செய்வதாக இருக்கிறீர்கள்?" என்றார் ராஜாராமன்.

"ஏற்கெனவே நிறையச் செய்து வந்துள்ளோம். அய்யா! தங்களுக்கு உண்மையில் அதுபற்றி ஏதும் தெரியாதா?"

"வட இந்தியாவில் பல ஊர்களில் நிறையக் கொள்ளைகள் நடப்பதற்குக் காரணம் சுதந்திரப் போராட்ட வீரர்களின் இயக்கமே என்று கேள்விப்படுகிறோம்."

"அது உண்மைதான், அய்யா. ஆனால் நாங்கள் கொள்ளையடிப்பது ஆங்கில ஏகாதிபத்தியத்தின் அரசு அலுவலகங்களைத்தான். அவர்களின் பாங்கிகளை. கஜானாக்களை. ரெயில் பெட்டியில் கார்டிடம் இருக்கும் இரும்புப் பணப் பெட்டியை உடைத்துக் கொள்ளையடித்தல் போன்ற செயல்களால் எங்களுக்குப் பணம் கிடைக்கிறது. பெரும் பணம் சேர்த்து வைத்துள்ள ஆங்கிலேயரின் பங்களாக்களிலும் நாங்கள் எங்கள் கைவரிசையைக் காட்டத் தவறியதில்லை."

"இதுபோன்ற ஏதேனும் ஒரு கொள்ளையிலாவது நீங்கள் நேரடியாய்க் கலந்து கொண்டதுண்டா?" என்று அமராவதி வாயைச் சற்றே பிளந்தபடி வினவ, நரேந்திர நாத் பானர்ஜி கடகடவென்று வாய்விட்டுச் சிரித்தான்.

"அப்படிச் செய்ய வேண்டும் என்ற ஆசை எனக்கு ரொம்பவே உண்டு. ஆனால் அந்தப் பரபரப்பான இனிய அனுபவம் இன்னும் எனக்குக் கிட்டவில்லை. எனது பயிற்சிக்காலம் இன்னும் முடியவில்லை. முடிந்தபிறகு இதுபோன்ற வீர தீர விளையாட்டுக்களில் அவர்கள் என்னையும் சேர்த்துக் கொள்ளக்கூடும். ஆனால், ஒரு சில முக்கிய நிகழ்ச்சிகள் தாமாக என்னைத் தேடி வந்ததுண்டு. அவற்றைப் பிறகு சொல்லுகிறேனே?"

"இந்தியர்களில் யாரையும் நீங்கள் கொள்ளையடிப்பதில்லையா?"

"பொதுவாக இல்லை. மிக, மிகப் பெரிய பணக்காரர்களாக இருந்து கொண்டு வெள்ளையர்களுக்கு வால் பிடிப்பவர்களாகவும் இருந்தால் அவர்களைக் கொள்ளையடிப்போம்."

"இது போன்ற பணிகளில் பெண்கள் உண்டா?" என்று ஆவலுடன் விசாரித்தாள் அமராவதி.

"இல்லை. கூடிய விரைவில் அவர்களும் பங்கேற்கக்கூடும் என்றே தோன்றுகிறது. இம்மாதிரியான கொள்ளைகளைச் செய்வதில் பெண்களுக்குச் சிறு தீங்கும் விளைவிக்கக்கூடாது, அவர்கள் மீது சுண்டு விரலும் படக்கூடாது என்பது எங்களுக்கு நாங்களே விதித்துக் கொண்டிருக்கும் கட்டுப்பாடு."

"அவசியமானால் மட்டுமே கொலை செய்வீர்கள், இல்லையா?" என்றாள் அஞ்சனா.

"தற்காப்புக்காகவும் எங்களுக்கு இடைஞ்சல் இல்லாதிருப்பதற்காகவும் மட்டுமே கொலை செய்வோம்...."

காலடியோசை கேட்டு மூவரும் தலை உயர்த்த, பாமா வந்து நின்றாள்.

அவர்களது பேச்சை அரைகுறையாய்ப் புரிந்து கொண்டு,

"என்னன்னா இதெல்லாம்? என்னமோ கொலை, கொள்ளைனெல்லாம் பேசறானே?" என்றாள் கலவரத்துடன்.

(தொடரும்)

"ஏங்க, ராத்திரி 12 மணிக்கு பஸ் வந்து சேர்ந்ததுன்னு சொல்றீங்க. நேரா ஆட்டோ பிடிச்சு வீட்டுக்கு வரவேண்டியதுதானே? உங்களை யார் லாட்ஜுல ரூம் போடச் சொன்னது?"

"ஆட்டோ சார்ஜை விட ரூம் வாடகை கம்மியா இருந்தது. அதனாலதான்!"

- ஏ. சுந்தரம்



## ஸ்ரீராமின் மதிப்பு மிக்க












கௌரவம். சிறப்புரிமை.
அந்தஸ்து. பெருமிதம்.

# சந்தாதாரர்களே!

## கௌரவம். சிறப்புரிமை. அந்தஸ்து. பெருமிதம்.

ஸ்ரீராம் சிட்ஸ் சந்தாதாரர்கள் மட்டுமே அடையும் சிறப்புப் பலன்கள். துல்லியமாகச் சொல்வதென்றால்... 7,50,000 சந்தாதாரர்கள்.

ரூ.400 கோடி வரை ஆண்டு வணிகம் புரியும் ஸ்ரீராம் சிட்ஸில் சந்தாதாரராக இருப்பதனால் பெறும் தனிச்சலுகை இது. ஸ்ரீராம் சிட்ஸ் — ஒவ்வொரு நாளும் ரூ.1 கோடி வரை ஏலத் தொகையாக விநியோகிக்கும் நிறுவனம். ரூ.650 கோடி மதிப்புள்ள ஸ்ரீராம் நிறுவனங்களின் ஓர் அங்கம். இந்நிறுவனங்கள் 1995-ல் அடையத் திட்டமிட்டுள்ள மதிப்பு ரூ.1000 கோடி.

சந்தாதாரர்கள் ஒவ்வொருவரும் கொண்டுள்ள நிலையான உறவைப் பாராட்டும் வகையில் ஸ்ரீராம் சிட்ஸ் இக்கௌரவத்தை வழங்குகிறது. அதன் பயனாக அவர்களுடைய தொடர்பு புதிய வலுப்பெற்றுத் தொடர்ந்து நீடிக்கப் போகிறது.

தனிச்சிறப்பு வாய்ந்த இக்கௌரவம் ஸ்ரீராம் சிட்ஸ் சந்தாதாரர்களுக்கு மட்டும்தான்.

உங்கள் வாயிற்கதவின் மறுபுறம் ஒரு வாய்ப்பு உங்களுக்காகக் காத்திருக்கப்போகிறது. அது என்னவென்று உங்களால் ஊகிக்க முடிகிறதா? உங்களைக் கௌரவிக்கும் வகையில் ஒரு சிறப்புச் சலுகை... அதன் பலனாக நீங்கள் பெறப்போகும் பல்வேறு மகிழ்ச்சி தரும் பயன்கள் — தெரிந்து கொள்ள வேண்டுமா?

முதல் தட்டுக்கே வாயிற்கதவைத் திறந்து விடுங்கள்.




**ஸ்ரீராம் சிட்ஸ் &**
**இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.**

நிர்வாக அலுவலகம்: ''சுப்பிரமணியம் பில்டிங்'',
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன்: 8520700|8523932|8522651|
8525536|8520797

ADWAVE/SCH4745 TAM A

***ஸ்ரீராம் சிட்ஸ் — உங்கள் வளமைக்குப் பாதை***



சில்க் : யோகாசன ஆசிரியர்

# டெலிஃபிலிம் கிசுகிசு!

'ப்ளே கேர்ள்ஸ்' என்ற தலைப்பையும், அதில் சில்க் ஸ்மிதா கதாநாயகியாக நடிப்பதையும் வைத்து, 'ஒரு மாதிரி' விஷயமா என்று கேட்டுவிடாதீர்கள். இது யோகாசனத்தின் அற்புத நன்மைகளை விளக்கும் படம்" என்றார் ஆர். டி. சேகர்.

'புதிய முகம்', 'பாசமலர்கள்', 'வைஷாலி' - போன்ற படங்களில் எடிட்டராகப் பணியாற்றியவர், இந்தப் படத்தின் மூலம் இயக்குனராகியிருக்கிறார்.

தொண்ணூறு நிமிடம் மட்டுமே ஓடக்கூடிய இந்தப் படத்தில் சண்டைக் காட்சிகளோ, பாடல் காட்சிகளோ இல்லை. தாங்க்ஸ்பா!

டீ. வி. யிலும் பத்திரிகைகளைப் போல, அக்கப்போர் செய்திகள் தரப் போகிறார்கள்! ஜெயின் டீ.வி.யில் அனைவராலும் பரபரப்பாகப் பேசப்படும் கிசுகிசுக்களும், அது சம்பந்தப்பட்ட பிரமுகர்களின் அதிரடி பதில்களும் ஒளிபரப்ப இருக்கிறார்கள்!

மெல்லிசை சிகரங்கள் மீண்டும் இணைகிறார்கள். என்பது பழைய நியூஸ். மோகன்லால் நடித்த 'சித்ரம்' படத்தின் ரீமேக்கான 'எங்கிருந்தோ வந்தான்' படத்திற்காக இருவரும் இப்போது சேர்ந்து இசையமைக்கிறார்கள் என்பது புதுசு அல்லவா? பாட்டு நன்றாக வரவேண்டும்; லண்டனுக்குப் போய் மெட்டுப் போடுவதாக இருந்தாலும் பரவாயில்லை என்று தயாரிப்பாளர் சொன்னாலும், குருவாயூரில் தனிமையில் தங்கி இசையமைக்கப் போகிறார்கள், மெல்லிசை இரட்டையர்.

"சென்சார் குழு அறிவித்திருக்கும் கட்டளைகளின்படி படம் எடுப்பதென்றால், இன்றைக்கு 'மணாளனே மங்கையின் பாக்கியம்' கதை கூட எடுக்க முடியாது."

- இப்படி லேட்டஸ்ட்டாகப் பொன்மொழிந்திருப்பவர் இயக்குநர் கே. சுபாஷ்.

- ஹர்ஷராஜ்

# ஊக்கப் பரிசுகள் மழை!

## S.I.C. பாண்ட்

| திட்டம் 'A' | திட்டம் 'B' |
|---|---|
| ஒரே தவணையில் ரூ.8,250 கட்டலாம் | ரூ.500X20 மாதங்கள் = ரூ.10,000/- |

20-ம் மாதத்தின் முடிவில், உங்கள் சேமிப்பிற்கு 'S.I.C. பாண்ட்' வழங்கப்படும். அதற்கடுத்த 60-ம் மாதத்தின் முடிவில், நீங்கள் ரூ. 25,000/- பெறலாம்

### ஊக்கப் பரிசுகள்

| பரிசுப் பொருட்கள் | மொத்தப் பரிசுகள் |
|---|---|
| 800 சி.சி. மாருதி வேன் | 2 |
| பஜாஜ் ஆட்டோ | 1 |
| பஜாஜ் 'சேதக்' ஸ்கூட்டர் | 3 |
| தங்கச்சங்கிலி (40 கிராம்) | 11 |
| பஜாஜ் எம்-80 | 2 |
| தங்கச்சங்கிலி (32 கிராம்) | 3 |
| வெள்ளி கல்யாண செட் (1 கிலோ) | 3 |
| தங்கச் சங்கிலி (16கிராம்) | 17 |
| ஒனிடா கலர் டி.வி | 17 |
| காட்ரேஜ் ரிப்ரிஜிரேட்டர் (165 லிட்டர்) | 17 |
| வீடியோ கான் சலவை இயந்திரம் | 17 |
| பட்டுப்புடவைகள் (ரூ.2000/-பரிசுக் கூப்பன்) | 30 |
| 'டைட்டன்' கைக்கடிகாரங்கள் (தலா, ரூ.1000/-) | 30 |
| வெள்ளி காமாட்சியம்மன் விளக்கு | 30 |
| வெள்ளி தம்ளர் | 60 |
| 'நிப்போ' ரைஸ் குக்கர் | 85 |
| பட்டுப் புடவை (ரூ.1000/- பரிசுக்கூப்பன்) | 170 |
| பிரட் டோஸ்டர் | 170 |
| மொத்தம் | 668 |

உங்கள் டெபாசிட்டுகளுக்கு

**21% வட்டி + 1% ஊக்கத் தொகை**

### S.I.C. நிர்வாகிகள் குழு:

**திரு. பி.பாலசுப்பிரமணியம்** B.Sc.
- அறங்காவலர் குழுத் தலைவர், கந்த கோட்டம்.
- ஆலோசகர், பார்க் டவுன் பெனிபிட் பண்ட் லிட்.

**திரு.ஆர். விவேகானந்தன்** B.Com.
- தலைவர், பார்க் டவுன் பெனிபிட் பண்ட் லிட்.

**திரு.கே.சுந்தரம்,** B.sc., F.C.A., A.I.C.W.A.B.L.
- இயக்குநர், பர்பெக்ட் பெனிபிட் பண்ட் லிட்.

**திருமதி. ஆர் சூரியகுமாரி**
- பார்ட்னர் சூர்யா இண்டஸ்ட்ரியல் கார்ப்பரேஷன்

**திரு. ஆர். லட்சுமணஸ்வாமி** B.A., (C.S)
- இயக்குநர், ஸ்ரீமுத்துக்குமார ஸ்வாமி பர்மனெண்ட் பண்ட் லிட்.

**டாக்டர் எஸ்.பிரகாஷ்,** M.S.
- கன்சல்டன்ட்.




விபரங்களும், விண்ணப்பங்களும் பெற:

## S.I.C. குரூப்

58, அருணாசலம் தெரு, 'கலைவாணர் அரங்கம்' எதிரில்
சேப்பாக்கம், சென்னை-600005. போன்: 84 27 06.



• வெள்ளி விழா (படம் உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்.)

HOLLY WOOD is a place where you can be for gotten while you are out of the room to use the toilet.

- ஹாலிவுட் திரையுலகத்தைப் பற்றி இப்படி ஒருவர் குறிப்பிட்டிருக்கிறார். யார் என்பது நினைவில் இல்லை.

வெல்லிங்டன் நர்ஸிங் ஹோமி விருந்து வீட்டிற்கு வந்த நேரம்.

திரைத் துறையைச் சேர்ந்த நண்பர்கள், அபிமானிகள், என்னை வீட்டில் வந்து பார்த்து விட்டு நலம் விசாரித்துச் சென்றார் கள்.

என்றாலும் நான் சற்றும் எதிர்பாராத முதல் விசிட்டர்... பெருமதிப்பிற்குரிய, சமீபத் தில் அமரராகிவிட்ட எல்.வி. பிரசாத் அவர் கள்தான். அப்பொழுது எனக்கும் அவருக் கும் நெருக்கமான எந்தத் தொடர்பும் கிடை யாது. எனக்கும் அவருக்கும் தலைமுறை வித்தியாசம் வேறு! என்றாலும் நர்சிங் ஹோமிலிருந்து நான் வீட்டிற்கு வந்த அன்றே என்னைப் பார்க்க வந்திருந்தார்.

"நீங்கள் நீண்ட நெடுங்காலம் வாழ்வீர் கள்; திரைத் துறைக்கு உங்கள் சேவை அவ சியம் வேண்டும்" என்று அவர் ஆத்மார்த்த மாகச் சொல்லி என்னை வாழ்த்தி விட்டுச் சென்ற அந்த வார்த்தை களுக்கு ஈடாக எந்த ...டானிக்கையும் மருந்தை ...யும் என்னால் எண்ணிப் பார்க்க முடியவில்லை.

பிற்காலத்தில் பிரசாத் புரொடக் ஷன்ஸ் சார்பிலே நான் எனது 'மரோ சரித்ரா'வை இந்தியில் இயக்கித் தந்து அது மாபெரும் வெற்றியை ஈட்டித் தந்த விஷயங் களைப் பின்னால் பார்க்கலாம் என்றாலும் ஒரு சின்ன FLASH FORWARD. 1982.

இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம்; நானும் பிரசாத் அவர்களும் அடுத்தடுத்த இருக்கைகளில்! இந்திப் படத்தின் பாடல் பதிவிற்காகப் பம்பாய் சென்று கொண்டிருக் கிறோம்.

"ஏன் நீங்கள் புராணப் படங்கள் எடுப்ப தில்லை"யென்று பிரசாத் கேட்டார்கள்.

"பாலசந்தர் ராமாயணத்தை படமாக எடுத்தால் ராமனுக்கு இன்னொரு மனை வியை எதிர்பார்ப்பார்கள்! அந்த பயத்தில் தான் புராணப் படங்களை நான் எடுப்ப தில்லை" என்று சொன்னேன்.

"ஓ" என்று வாய் விட்டுச் சிரித்தார் பிர சாத் அவர்கள். மற்ற இருக்கைகளில் இருப்ப வர்கள் எங்களைத் திரும்பிப் பார்த்தார்கள். விமானப் பணிப்பெண் 'ஸ்னாக்ஸ் டிரே' கொடுத்து விட்டுச் சென்றாள்.

பிரசாத் அவர்கள் வெளியே எதுவுமே சாப்பிட மாட்டார்கள். ஆனால் பணிப் பெண் வைத்து விட்டுச் சென்ற 'ஸ்நாக்ஸ் டிரே'யைப் பிரித்துப் பார்த்து அதிலிருக்கும் பர்ஃபீ போன்ற ஒரு ஸ்வீட்டை மட்டும் எடுத்து அதை ஒரு காகிதத்தில் சுற்றித் தமது கைப்பைக்குள் வைத்துக் கொண்டார். நான் அவரைப் பார்த்தேன்!

"ஏன் வீணாக்க வேண்டும்? பம்பாய் போனால் அங்கே வேலைக்காரனுக்காவது

# கே.பாலசந்தர்

# நினைவலைகள்

கொடுக்கலாமே!" என்று சொன்னார்.

நான் விக்கித்துப் போயிருந்தேன். நம்மைப் போல் வெறும் 'சாதாரணங்களாக' இருந்தால் இந்தச் செய்கை ஒரு கௌரவக் குறைச்சலான ஒரு விஷயமாகத் தோன்றும். ஆனால் அது வெறும் 'பொய் கௌரவம்' என்று அன்று புரிந்து கொண்டேன். அந்த Selfmade மகோன்னதக் கலைஞனின் பின்னால் எத்தனை கோடிக்கணக்கான மதிப்புள்ள திரை சாம்ராஜ்யமே அடங்கி இருக்கிறது என்று எண்ணிப் பார்த்தேன். வெறும் 100 ரூபாயோடு வீட்டை விட்டு பம்பாய்க்கு ஓடிச் சென்று இந்தியாவின் மிகச் சிறந்த 'தாதா சாகேப் ஃபல்கே' விருதினைப் பெற்றிருக்கும் இந்த மகோன்னத மனிதரின் வெற்றிக்கு அடிப்படைக் காரணம் சட்டென்று எனக்குப் புரிந்தது.

'பொய் கௌரவம்' பார்க்காத செய்கைகளும் அவரது எளிமையும் சிக்கனமும்தான் என்கிற உண்மை பிடறியில் அறைந்தது.

**நா**ன் முற்றிலும் எதிர்பார்க்காத, என்னை வீட்டிலே வந்து நலம் விசாரிக்க வந்த அடுத்த பிரமுகர்.....

அதிகமான பார்வையாளர்களை என்னைப் பார்க்க அனுமதிக்கக் கூடாது என்று டாக்டர்கள் கூறியிருப்பதைச் சொல்லி அந்தப் பிரமுகரைத் திருப்பி அனுப்ப நினைத்திருக்கிறான் வாசலில் இருந்த எனது உதவியாளப் பையன்.

அந்தப் பிரமுகர் ஒரு 'விசிட்டிங் கார்டை' எடுத்துக் கொடுத்து இதைக் கொண்டு போய் அவரிடம் காட்டுங்கள். 'அவர் வரலாம்' என்று சொன்னால் மட்டுமே மேலே வருகிறேன் என்று சொல்லிப் பையனை மேலே அனுப்பினார்.

பையன் வந்து சொன்னான்; விசிட்டிங் கார்டைப் பார்த்தேன்! வாசலில் நிறுத்தி வைத்ததற்காக அவனைக் கடிந்து கொண்டு உடனே அவரை மேலே அழைத்து வரச் சொன்னேன்.

அன்பர் 'தமிழ்வாணன்' வந்தார். வழக்கமான 'கெட்அப்'புடன் அவர் வரவில்லை; தலையில் Hat இல்லாத வழுக்கைத் தலை. வேட்டியும் நீள ஜிப்பாவும் அணிந்திருந்தார். எனக்கே தெரிந்திராத அவரது இந்த Casual உடை பையனுக்கு எப்படித் தெரிந்திருக்க முடியும்?

எனக்கு மிகுந்த ஆச்சர்யம். அவரை எனக்குக் கொஞ்சமும் பழக்கமில்லை; நேருக்கு நேராக நாங்கள் ஒருமுறை கூட சந்தித்துக் கொண்டது கிடையாது. இருந்தும் நான் என்றைக்கு வீட்டுக்கு வருகிறேன் என்று தெரிந்து வைத்துக் கொண்டு அன்றைய தினமே பார்க்க வந்து விட்டார். பெரிய சிந்தனையாளர் என்கிற வகையிலும் எந்த ஒரு விஷயத்தையும் — ABOUT ALL THINGS UNDER THE SUN - சுவைபடச் சொல்வதிலே கைதேர்ந்த மன்னன் என்கிற வகையிலும் நான் அவருடைய பரம விசிறி.

அவரிடம் பேசிக் கொண்டிருந்த அந்த இரண்டு நிமிடங்களில் அவருடைய மனித நேயம் புரிந்தது.

"HEART ATTACK DOES NOT COME TO LEGENDS. YOU ARE A LEGEND" என்று சொல்லி விட்டுச் சென்றார்.

அவர் பேசிக் கொண்டிருந்து விட்டுச் சென்ற பிறகு படுக்கையை விட்டு எழுந்து 'சடுகுடு' ஆட வேண்டும் போல் தோன்றியது எனக்கு. தனி உற்சாகமும் ஒரு நம்பிக்கையும் பிறந்தது.

ஒரு "ASIDE INFORMATION."

## 3

இவர் மீதுள்ள ஒரு தனி அபிமானம்தான் பின்னால் நான் எடுத்த 'மன்மத லீலை' என்கிற திரைப்படத்தில் கமலஹாசன் வீட்டில் இருக்கும் ஒரு சின்னப் பையன் கேரக்டர்! யார் எதைச் சொன்னாலும் அதை அந்தப் பையன் ஒப்புக் கொள்ள மாட்டான்; 'கல்கண்டு' பத்திரிகையில் அந்தச் செய்தி வந்திருந்தால்தான் ஒப்புக் கொள்வான். எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லத் தெரிந்த ஒரே ஒரு ஆள் உலகத்திலே 'தமிழ்வாணன் ஸார்'தான் என்பான். "எங்க தமிழ்வாணன் சொல்லிட் டாரு" என்று அடிக்கடி கற்கண்டு பத்திரிகையிலிருந்து மேற்கோள் காட்டியபடியே பேசுவான்.

'Heart attack doesn't come to legends' என்று என்னிடம் சொன்ன அந்த சிந்தனையாளர் பல ஆண்டுகள் கழித்து இருதய நோயில்தான் இறந்தார் என்று கேள்விப்பட்ட போது "HOW CAN HEART ATTACK KILL A LEGEND?" என்று நான் விக்கித்துப் போனேன்.

மூன்று மாதங்கள் நான் கண்டிப்பாக ஓய்வு எடுத்தே ஆக வேண்டுமென்று டாக்டர்கள் கருத்துத் தெரிவித்த போது கட்டுரை ஆரம்பத்தில் நான் குறிப்பிட்டிருக்கும் ஹாலிவுட் பற்றிய மேற்கோள்தான் எனக்கு நினைவுக்கு வந்தது.

இனி முன்போல் செயல்பட முடியுமா என்கிற பயம்! என்னால் முடிந்தாலும் என்னை நம்பிப் பணம் போடுகின்ற தயாரிப்பாளர்களுக்கு அந்த நம்பிக்கை வர வேண்டுமே? ஏற்கெனவே என்னை வைத்து அடுத்த தமிழ்ப் படம் எடுக்க வேண்டுமென்றிருந்த ஒரு தயாரிப்பாளர் நைசாக நழுவி இன்னொரு இயக்குனரின் பின்னால் சுற்ற ஆரம்பித்து விட்டார். எந்த நேரத்திலும் எனக்கு பக்கபலமாக, தூண்களாக நின்றவர்கள் கலாகேந்திரா கோவிந்த ராஜனும் துரை அவர்களும்தான் என்பதை இந்த நேரத்தில் நான் குறிப்பிட்டே ஆக வேண்டும்.

என்னை நம்பிப் பணிபுரியும் எனது யூனிட்டைச் சேர்ந்த மற்ற கலைநுணுக்க வல்லுனர்களுக்கும், எனது உதவியாளர்களுக்கும் எனது மூன்று மாத ஓய்வினால் பாதகம் ஏற்பட்டு விடக் கூடாது என்கிற கவலை மேலோங்கி நின்றது.

அப்பொழுது என்னிடம் காமிரா மேனாகப் பணிபுரிந்து கொண்டிருந்த என். பாலகிருஷ்ணன், மற்றும் என் உதவியாளர்கள் அத்தனை பேருக்கும் தனித்தனியாக ஒரு கடிதம் எழுதினேன். அடுத்த மூன்று மாதங்












கள் அவர்கள் வேலையில்லாமல் இருக்கப் போவதைக் குறிப்பிட்டு, அதற்குப் பின் என்னவெல்லாம் ஆகுமோ என்கிற பயத்தையும் தெரிவித்து, "என் பொருட்டு உங்களுடைய எதிர்காலம் வீணாவதை நான் விரும்பவில்லை. நீங்கள் உங்கள் எதிர்காலத்தை மனத்தில் கொண்டு சுதந்திரமாக முடிவெடுத்துக் கொள்ளுங்கள்" என்று எழுதினேன்.

கண்கலங்கி நின்ற எனது யூனிட் அங்கத்தினர்களிடம் எதையுமே பிராக்டிகலாக எண்ணிப் பார்க்க வேண்டிய அவசியத்தையும் இந்த விஷயத்தில் 'சென்டிமெண்ட்' பார்க்க வேண்டிய தேவையில்லையென்றும் வலியுறுத்தினேன்.

ஒருசிலரைத் தவிர மற்றவர்கள் வெவ்வேறு இடங்களில் வேலை தேடிக் கொண்டார்கள். இதே போல் அந்த கட்டாய ஓய்வு காலத்தில் இன்னொரு முக்கியமான கடிதமும் எழுதினேன்.

'வெள்ளி விழா' படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த தருணத்தில் மதிப்பிற்குரிய ஏ.வி.எம். செட்டியார் அவர்களிடமிருந்து எனக்கு ஒரு அழைப்பு வந்தது.

போய் சந்தித்தேன். சிவாஜி கணேசன் அவர்கள் நடித்திருந்த பாபு திரைப்படத்தை இந்தியில் தான் எடுக்கவிரும்புவதாகவும், சிவாஜியின் வேடத்தில் திலீப்குமார் நடிக்க ஒப்பந்தமாகியிருப்பதாகவும், அந்த இந்திப் படத்தை நான் இயக்கித் தர வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார். இயக்குனர்களின் பணியில் அடிக்கடி தலையிடும் திலீப்குமார் அவர்கள் பற்றிச் சொல்லி, எனது தயக்கத்தைத் தெரிவிக்க...

"இல்லே பாலசந்தர்! அவர்கிட்டே நான் கண்டிப்பா சொல்லிட்டேன். பாலசந்தர் யார் குறுக்கிடறதையும் விரும்ப மாட்டார்; அதை மனசில வச்சுக்கிட்டு நீங்க ஒத்துழைப்பைக் கொடுக்கணும்னு சொல்லிட்டேன். அந்தக் கவலை கொஞ்சம் கூட உங்களுக்கு வேண்டாம்" என்றார்.

இவ்வளவு தூரம் ஏ.வி.எம். அவர்களே உத்தரவாதம் வழங்கிய பிறகு நான் இந்திப் படத்தை இயக்க ஒப்புக் கொண்டு அவர்கள் கொடுத்த முன் பணத்தையும் நன்றியுடன் பெற்றுக் கொண்டு வந்து விட்டேன்.

இது நடந்த இரண்டு மூன்று வாரங்களுக்குள்தான் "ஆஸ்பத்திரி பிரவேசம்" எனக்குக் கிடைத்தது.

நர்சிங்ஹோமில் இருந்த நேரத்திலேயே ஏ.வி.எம். அவர்களுக்கு ஒரு கடிதம் எழுதினேன். "இப்பொழுது எனது உடல்நிலையிருக்கும் சூழ்நிலையில் நான் ஒப்புக் கொண்ட இந்தி திரைப்படத்தை டைரக்ட் செய்ய எனக்கு இயலாது என்று தோன்றுகிறது! எனவே நீங்கள் என்னை மன்னித்து வேறு எந்த டைரக்டரையாவது உடனே ஏற்பாடு செய்து கொண்டு இந்திப் படத்தின் வேலைகளைத் தொடங்கலாம். உங்கள் ஸ்தாபனத்தில் பணிபுரிகின்ற ஒரு மகத்தான வாய்ப்பை இழப்பதில் நான்தான் துரதிர்ஷ்டக்காரன்" என்று எழுதியிருந்தேன்.

அடுத்த நாளே திரு ஏ.வி.எம். அவர்களிடமிருந்து வந்த உருக்கமான பதில் கடிதம் எனது கண்களில் நீரை வரவழைத்தது.

"உங்களது உடல்நலனை விட வேறு எந்த விஷயமும் எனக்கு முக்கியமில்லை. அந்தப் படம் எடுக்கும் திட்டத்தையே வேண்டுமானாலும் நான் கைவிடுவேன்; நீங்கள் பூரண நலம் பெற்று விரைவில் வீடு திரும்ப வேண்டும்! அதுதான் இப்போது எனக்கு முக்கியம்."

அந்தத் திட்டம் கைவிடப்பட்டது.

மூன்று மாத காலம் அரைகுறையாக நின்றிருந்த படம் 'வெள்ளி விழா', என் ஓய்விற்குப் பிறகு தொடங்கியது. என் கூடவே என் மனைவியும் படப்பிடிப்புகளுக்கு வர ஆரம்பித்தாள். என் வேலை நேரத்தை அவள் நிர்ணயித்தாள்.

'வெள்ளி விழா' எனக்கு மிகவும் பிடித்த படம்; வெளிவந்தது; மக்களுக்குப் பிடிக்கவில்லை... The public is never wrong.

படம் 'சூப்பர் ஹிட்' என்றால் கிடைக்கும் மரியாதையே வேறு! கற்றார்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு என்பதைப் போல். அந்த மரியாதையே தனி! தோல்வியென்றால் ஆபீஸ் பையன் கூட நம்மைப் பார்த்து எழுந்திருக்க மாட்டான். பார்க்காதது போல் உட்கார்ந்தபடியே முகத்தைத் திருப்பிக் கொள்வான்.

Nothing succeeds like success.

ஆனால் அந்த மூன்று மாத ஓய்வு நேரம் நிறைய படிக்கக்கூடிய வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தது. KEN RUSSELL என்கிற ஆங்கில திரைப்பட இயக்குநர் சொன்னார் :

"I Want to shock people into awareness. don't believe there is any virtue in under statement."

அடுத்து நான் எடுத்த மூன்று படங்கள்

அரங்கேற்றம்

அவள் ஒரு தொடர்கதை

அபூர்வ ராகங்கள்.

I shocked the people!

மூன்று படங்களுமே 'சூப்பர் ஹிட்' படங்கள்.

*(நினைவலைகள் தொடரும்)*

# ஊழலுக்குப் பின்னால் சில உண்மைகள்!

சர்க்கரை தட்டுப்பாட்டையும் அதன் விளைவான விலை ஏற்றத்தையும் பார்த்த பிரதமர், காபினெட் செயலரிடம் உடனடி நடவடிக்கை எடுக்கச் சொன்னார். உணவுத் துறை அமைச்சர் கல்பநாத் ராய்க்கு இந்த விவரம் தெரியாது. தெரிந்ததும் அந்த நடவடிக்கையை ரத்து செய்தார். சர்க்கரை தட்டுப்பாடு வரும், இறக்குமதி செய்யத்தான் வேண்டும் என்று முன்னமே சிவில் சப்ளைஸ் துறை எச்சரித்தபோது, அலட்சியமாய் இருந்தவர் ராய். நிலைமையைப் புரிந்து கொண்ட வியாபாரிகள், விலையை எக்கச் சக்கமாய் உயர்த்தினார்கள். பிரதமருக்கு, ராய் மீது அசாத்திய கோபம். முன்னாள் சி.ஏ.ஜி. கியான் பிரகாஷிடம் முழு விவகாரத்தையும் ஆராயச் சொல்லி விட்டார். இந்த அரசியல் ஒருபுறமிருக்க, உள்நாட்டில் உண்மையான நிலவரம் என்ன? கரும்பு விளைச்சல், சர்க்கரை உற்பத்தி நிலைமை என்ன? அருணா ஷுகர்ஸ் அதிபர் மருதைப் பிள்ளையிடம் இதுபற்றிப் பேசினோம்.

## அரசியலின் பங்கு

பல வருடங்களாகவே, கரும்புக்கும் சர்க்கரைக்கும் விலை நிர்ணயிப்பதில் அரசியலின் பங்கு கணிசமாகவே இருந்தது. அதாவது, அரசியல் அடிப்படையில் முடிவுகள் எடுக்கப்பட்டன. பொருளாதார அடிப்படையை வைத்து அல்ல.

விவசாயப் பயிர் வகைகளுக்கு ஆதார விலையை நிச்சயிக்கும்போது, வருடா வருடம் உயர்த்திக் கொண்டே போய், விவசாயிகளைச் சந்தோஷப்படுத்தும் நோக்கம் வெளிப்படையாகவே தெரியும். கரும்பு உற்பத்தி யாளர்கள் விஷயத்தில் இது அப்பட்டமான உண்மை; ஏனென்றால் அவர்களின் வோட்டுக்கள் வேண்டுமே!

## உற்பத்தி எவ்வளவு?

1991ல், 134லட்சம் டன் சர்க்கரை ஆயிற்று. அடுத்த வருடமே 110 லட்சம் டன்களுக்குக் குறைந்து, 93ல் 106 லட்சம் டன்களாயிற்று. இந்த வருடம் இன்னும் குறைந்து 98 லட்சம் டன்களாகி விட்டது. இதில் இன்னொரு விஷயம், கரும்பை கண்டசாரி (பூரி) சர்க்கரைக்கும், நாட்டுச் சர்க்கரைக்கும் வேறு ஒதுக்கிவிடுவதால், வெள்ளைச் சர்க்கரை உற்பத்திக்குப் போதுமான கரும்பு கிடைப்பதில்லை.



• கல்பநாத் ராய்



• மருதைப் பிள்ளை



• ராவ்

நாட்டிலுள்ள 410 சர்க்கரை ஆலைகள் எல்லாமாக 170 லட்சம் டன்கள் உற்பத்தி செய்ய முடியும்.

## உலகிலேயே..

உலகிலேயே நாம் தான் அதிக அளவு கரும்பு உற்பத்தி செய்கிறோம். ஆச்சரியமாய் இருக்கிறதா?

1991லும், 92லும் நாம்தான் அதிக பட்ச கரும்பு உற்பத்தியாளர்களாயிருந்தோம். இந்த அளவு உற்பத்தியை வைத்துக் கொண்டு கண்டசாரிக்கும், நாட்டுச் சர்க்கரைக்கும் கரும்பை ஒதுக்காது இருந்தால் 180 லட்சம் டன் சர்க்கரை தயாரித்திருக்க முடியும்.

## விலை நிர்ணயம்

மத்திய அரசுதான் ஒவ்வொரு வருடமும் கரும்பு விலை நிர்ணயிக்கும். இதற்கும் மேல், மாநில அரசு கொஞ்சம் உயர்த்தும். இதெல்லாம் தவிர, சர்க்கரை உற்பத்தி செய்யும் மாநிலங்களில் எல்லாம் பர்ச்சேஸ் டாக்ஸ் வேறு உண்டு. தமிழ்நாட்டில்தான் இது அதிகம்! அதாவது



## கட்டத்துக்குள் கட்டளைகள்!

தப்பித் தவறி, தகவல் ஒலி பரப்புத் துறை அமைச்சர் பதவி உங்களுக்குக் கிடைத்து விடுகிறது என்றால், தூர்தர்ஷன் நிகழ்ச்சிகளின் தரம் உயர முயற்சி எடுக்க மாட்டீர்களா என்ன! ஒரு தொடக்கமாக, தூர்தர்ஷனுக்கு, கட்டத்துக்குள் அடங்குகிற மாதிரி கட்டளைகள் இடுங்கள்! சிறந்த கட்டளைக்குப் பரிசு ரூ.250/- ஆசிரியர் தீர்ப்பே இறுதி. உறை மேல் "கட்டத்துக்குள் கட்டளைகள்" என்று தவறாது குறிப்பிடவும்

**முடிவு தேதி 27.8.94.**

பெயர்: ..............................

முகவரி: ..............................

..............................

சர்க்கரை ஆலைகளுக்கு விற்கும் ஒவ்வொரு டன் கரும்புக்கும் 70 ரூபாய். இது தவிர, எஸஸ் என்று ஒரு டன்னுக்கு 5 ரூபாய். ஆக 75 ரூபாய். ஆனால் இது கண்டசாரி, நாட்டுச் சர்க்கரை தயாரிப்பாளர்களுக்குக் கிடையாது. அதே மாதிரிதான் எக்சைஸ் வரியிலும். ஒரு குவின்டலுக்கு 60 ரூபாய். அதாவது ரூ.1.35, ஒரு கிலோவுக்கு.

### சமாளிப்பது எப்படி?

மத்திய அரசுக்கு 40 சதவீதம் லெவி சர்க்கரை கொடுத்தாக வேண்டும்– மிகக் குறைந்த விலைக்கு. வெளி மார்க்கெட்டுக்கு விற்கும் மீதமுள்ள சர்க்கரையில்தான் இந்த நஷ்டத்தைச் சமாளிக்க முடியும்.

### சீசன்

அக்டோபர் முதல் ஏப்ரல் வரை. மொத்தத்தில், சராசரியில் ஓர் ஆண்டில் 160 நாட்கள்தான் சர்க்கரை உற்பத்தி செய்யப் படுகிறது. அதுகூட ஒவ்வொரு மாநிலத்திலும் விளையும் கரும்பின் முதிர்ச்சியைப் பொறுத்தது. இந்த உற்பத்தியைத்தான் உற்பத்தியில்லாத மாதங்களுக்கும் வைத்துக் கொண்டு சமாளிக்க வேண்டும். வங்கி வட்டித் தொகைகள் சுமார் 40 ரூபாய் வரை ஒரு குவின்டாலுக்குச் சேருகிறது.

### விலை ஏற்றம்!

இப்படியாக, பர்ச்சேஸ் டேக்ஸ், எஸெஸ், எக்சைஸ் வரி, வங்கி வட்டி என்று விலை கூடிக் கொண்டே போகிறது.

தமிழ்நாட்டில் ஒரு டன்னுக்கு 440 ரூபாய் என்று சென்ற வருடம் இருந்த விலையில், இந்த வருடம் இன்னும் 25 சதவீதம் மாநில அரசு கூட்டியதில், 550 ரூபாய் ஆகிவிட்டது. இதன் மீது பர்ச்சேஸ் டாக்ஸும் சேரும்!

இவை எல்லாம் பொது மக்களுக்குத் தெரிவதில்லை. ஏன், அரசியல்வாதிகளுக்கும் கூடத்தான். இவ்வளவுக்குப் பிறகும் உலகிலேயே, இந்தியாவில்தான் சர்க்கரை விலை குறைவு என்பதைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன்.

– **எஸ்.வி.என்.**




## 90. இந்திரஜித்து மாண்டான்

"நான் உயிருடன் இருக்கத் தாங்கள் ஏன் கவலைப் படுகிறீர்கள்?" என்றான் இந்திரஜித்து.

இப்படித் தகப்பனுக்குத் தைரியம் சொல்லி விட்டு, சேனையைத் திரட்டிக் கொண்டு யுத்த களம் சென்றன்.

வானர சேனையைத் தாக்கி முறியடித்து லக்ஷக்கணக்கான உயிர்ச்சேதமும் படுகாயங்களும் உண்டாக்கினான். வானர சேனை தோல்வியுற்று ஒன்றும் செய்ய முடியாமல் தத்தளித்தது.

ராம லக்ஷ்மணர்களும் இந்திரஜித்தின் பிரம்மாஸ்திரத்தால் கட்டுண்டு பிரக்ஞையற்றுக் கிடந்தார்கள். அரக்க வீரன், கவலை கொண்டிருந்த தந்தையிடம் இந்தப் பெரிய வெற்றியைச் சொல்லிச் சந்தோஷப் படுத்தலாம் என்று சென்றான்.

விபீஷணன் வானரத் தலைவர்களைத் தேடித் தேடிக் கண்டு பிடித்துத் தேற்றிக் கொண்டு வந்தான்.

ஜாம்புவான், அரைஜீவனாகக் கிடந்தான். மெதுவாகச் சென்று வானரர்களை விசாரித்தான். 'மாருதி உயிரோடிருக்கிறானா?' என்று கேட்டான். மாருதி, 'இதோ இருக்கிறேன்' என்று வந்து ஜாம்புவானின் பாதத்தில் பணிந்து நமஸ்கரித்தான்.

"அப்பனே! உடனே வடக்கே செல்வாய். கடலைத் தாண்டி இமயமலைத் தொடருக்குப் போய் ரிஷப பர்வதத்துக்கும் கைலாச பர்வதத்துக்குமிடையில் இருக்கும் ஓஷதி பர்வதத்தின் உச்சியில் நான்கு மருந்துச் செடிகள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு வந்தாயானால் ராம லக்ஷ்மணர்களும் வானர சேனையும் நினைவு அடைந்து, ரணங்கள் தீர்ந்து, ஆரோக்கியம் அடைவார்கள். இதைக் காலதாமதமின்றி உடனே செய்வாய். இதைச் செய்யக் கூடியவன் நீ ஒருவன்தான்" என்றான்.

அவ்வாறே ஹனுமான் குதித்துக் கிளம்பினான். ஆகாய மார்க்கமாகச் சென்று குறிப்பிட்ட பர்வதத்தை அடைந்தான். ஆனால் ஓஷதிகளைக் கண்டெடுக்க அவனால் முடியவில்லை. அப்படியே முழு பர்வதத்தைத் தூக்கியெடுத்துக் கொண்டு லங்கைக்குத் திரும்பினான்.

ஹனுமான் தூக்கி வந்த சஞ்சீவி மலை ஆகாயத்தில் லங்கையை நெருங்கிய உடனே ராம லக்ஷ்மணர்களும் வானர சேனையும் உடலில் ஏறிய சரங்கள் நழுவி, காயங்கள் ஆறி, பூரண சுகநிலையில் எழுந்து நின்றார்கள்.

சுக்ரீவன் ராமனிடம் கலந்து யோசித்துச் சில வானரர்களைப் பொறுக்கியெடுத்து, லங்கைக்குள் பிரவேசித்து நகரத்துக்கு நெருப்பு வைக்கும்படி உத்தரவிட்டான்.

**ராஜாஜி**

அப்படியே வீரர்கள் ராத்திரி முன்ஜாமத்தில்

தீவட்டிகளுடன் பிரவேசித்தார்கள். காவலாளிகளை அடித்துத் தள்ளி லங்கையிலுள்ள கோபுரங்கள், மாளிகைகள் இவற்றுக்கு நெருப்பு வைத்தார்கள். ஆயிரக் கணக்கில் வீடுகள் எரிந்து சாம்பலாயின. செல்வமும் நாகரிகமும் நிறைந்த லங்கா நகரம் கோரமான நாசம் அடைந்தது.

இந்தச் சம்பவத்தை வால்மீகி முனிவர் மிக விவரமாகச் சித்திரித்திருக்கிறார். அதைப் படித்தால் இந்த யுகத்தில் நடத்தப்படும் யுத்தங்களில் நடை பெறும் நகர நாசக் கதையாகவே காணப்படுகிறது.

**வா**னரர்களால் லங்கா நகரம் எரிக்கப்படுவதைக் கண்ட ராவணன் பெருங் கோபம் கொண்டு கும்பகர்ணனுடைய புத்திரர்களான கும்பன், நிகும்பன் இவர்களை யூபாக்ஷன் முதலிய அரக்க வீரர்களுடன் யுத்தகளத்துக்கு அனுப்பினான். ராக்ஷசர்களுக்கும் வானரர்களுக்கும் கோர யுத்தம் நடந்தது.

கும்பன் சுக்ரீவனாலும் நிகும்பன் மாருதியாலும் வதம் செய்யப்பட்டார்கள்.

கரனுடைய மகன் மகாரக்ஷன் என்ற அரக்கன் ராமனையே எதிர்த்து ராமனுடைய ஆக்னேய அஸ்திரத்துக்கு இரையானான்.

இன்னும் பல பெரிய அரக்கர்கள் மாண்டார்கள். அதன்பேரில் இராவணன் சொல்லின்படி இந்திரஜித்து மறுபடியும் புறப்பட்டான். இந்திரஜித்து அசுர வேள்வி ஒன்று செய்து, அதன் பயனாக ஆகாயம் ஏறிப் பார்வைக்கு மறைந்து, யுத்தம் செய்தான்.

**இ**ந்திரஜித்து தன்னுடைய மாய வித்தையினால் ஒரு பொய்ச் சீதையை உண்டாக்கி அவளைத் தேரில் ஏற்றிக் கொண்டு வானர சேனைக்கு எதிரில் சீதையை நிறுத்தி அவளை அவர்கள் முன்னிலையில் கொன்றான். இதைக் கண்டு வானர வீரர்களும் மற்றவர்களும் ஏமாந்து போய், இனி யுத்தம் செய்து என்ன பயன் என்று யுத்தத்தை நிறுத்தி விட்டு ராமனிடம் போய் யோசிக்கச் சென்றார்கள். இவ்வாறு ஜாலம் நடத்தி விட்டு இந்திரஜித்து வேறொரு பெரிய அசுர யாகம் செய்யச் சமயம் செய்து கொண்டான். இது வானர வீரர்களுக்காவது ராம லக்ஷ்மணர்களுக்காவது தெரியாது. அவர்கள் சீதை உயிரிழந்ததைப் பற்றி ஆறாத துக்கம் அடைந்து இன்னது செய்வது என்று தோன்றாமல் அறிவு இழந்து கிடந்தார்கள். அப்போது விபீஷணன் வந்து என்ன விஷயம் என்று விசாரித்தான். நடந்ததையெல்லாம் அவனுக்குத் தெரிவித்தார்கள். "ஐயோ, இப்படி நீங்கள் மோசம் போனீர்களே, ஒருநாளும் ராவணன் சீதையைக் கொல்ல விடமாட்டான். இது ஒரு யுக்தி! பொய்யும் மாயையும் செய்து இந்திரஜித்து தன்னுடைய சூழ்ச்சியை நிறைவேற்றப் பார்க்கிறான். மற்ற எவ்விதத்திலும் காரியம் நிறைவேறாது என்று அவன் இப்போது அசுரயாகம் செய்யப் போயிருக்கிறான். அது முடிந்து விட்டால் பிறகு நம்மால் அவனை ஜெயிக்க முடியாது. ஆனபடியால் உடனே அந்த யாகத்தை நாம் தடுத்து விட வேண்டும். சீதை இறந்தாள் என்று எண்ணி ஏமாந்து போகாதீர்கள். லக்ஷ்மணன் உடனே சென்று இந்திரஜித்தினுடைய வேள்வியைக் கலைத்துவிட வேண்டும்" என்று யோசனை சொன்னான்.

சக்கரவர்த்தித் திருமகன்

இந்த யோசனையே சரி என்று ஒப்புக் கொண்டு ராமச்சந்திரன் தம்பியை அனுப்பினான். அவனுடன் ஆஞ்சநேயனும் வானரர்களும் விபீஷணனும் சென்றார்கள்.

இந்திரஜித்து பூத கணங்களுக்குச் செய்யவிருந்த யாக பூமிக்குச் சென்றார்கள். வேள்வி தடைப்பட்டு அவ்விடம் வெகு நேரம் பெரும் யுத்தம் நடந்தது. தேரின்மேல் நின்று ராவணகுமாரன் பாணங்கள் செலுத்தினான். லக்ஷ்மணன் ஆஞ்சனேயன் மேல் நின்று பாணங்கள் செலுத்தினான்.

# கிழவர்களுக்கு மட்டுமா கீதை?

இளைஞன் அர்ஜுனனுக்கு அன்று கண்ணன் சொன்னதை, இன்றைய இளைஞர்களுக்கு எடுத்துச் சொல்கிறார் சுகி சிவம்....

இருவரும் விற்போரில் நிபுணர்கள். ஒருவருக்கு ஒருவர் குறைந்தவர்களல்ல. நிகரற்ற திறமையுடன் வெகுநேரம் யுத்தம் நடத்தினார்கள். விபீஷணன் லக்ஷ்மணனுக்கு உற்சாகம் ஊட்டிக் கொண்டு நின்றான். இந்திரஜித்தின் தேர் அழிந்தது. பிறகு தரையில் நின்று இருவரும் போர் செய்தார்கள். முடிவில் லக்ஷ்மணன் இந்திராஸ்திர மந்திரம் சொல்லி ராமன்மேல் ஆணையிட்டு பாணத்தைச் செலுத்தினான். இந்திரஜித்தின் தலை அறுபட்டு ஜொலித்துக் கொண்டு தரையில் விழுந்தது. தேவதானவ கந்தர்வர்கள் ஆகாயத்திலிருந்து புஷ்பமாரி பெய்தார்கள்.

இந்திரஜித்தை வீழ்த்தி விட்டு, லக்ஷ்மணன் ராமன் இருந்த இடம் சென்றான். உடம்பெல்லாம் காயம் பட்டு ரத்தம் பெருகிய நிலையில் லக்ஷ்மணன் மெள்ள ஜாம்பவான், ஹனுமான் இவர்கள் பேரில் சாய்ந்து நடந்தான். இந்திரஜித்தின் வதத்தையறிந்த ராமன், தம்பியை ஆலிங்கனம் செய்து, "லக்ஷ்மணா! இனி ராக்ஷஸ குலம் மடிந்தது" என்று சொல்லி மகிழ்ச்சிப் பரவசப்பட்டான். அடக்கத்துடன் ஒதுங்கி நின்ற லக்ஷ்மணனை ராமசந்திரன் தன் மடியின் மேல் உட்கார வைத்து, உச்சி மோந்து தன் ஆனந்தத்துக்குப் போக்கு விட்டுப் பேசலானான்: "ஒருவராலும் செய்ய முடியாத வீரச் செயலைச் செய்து தீர்த்தாய். ராவணனுடைய வலது கை உன்னால் இன்று வெட்டப்பட்டது. விபீஷணனுக்கும் ஹனுமானுக்கும் உனக்கும் சமானம் யார்? இனி எனக்கு ஒரு கவலையுமில்லை. இந்திரனை ஜெயித்த வீரனை நீ ஜெயித்து வதம் செய்து விட்டாய். சீதையை அடைந்து விட்டேன் என்றே எண்ணுகிறேன்" என்றான்.

இந்திரஜித்து லக்ஷ்மணனால் வதம் செய்யப்பட்டான் என்கிற செய்தி ராவணனுக்கு எட்டியது. "உன் மகனை விபீஷணனுடைய சகாயத்தைக் கொண்டு லக்ஷ்மணன் கொன்றான்" என்று சொல்லக் கேட்டதும், துக்கமும் கோபமும் சமுத்திரம் போல் பொங்கி, எரியும் சுடர் எண்ணெய்த் துளிகள் போல் கண்ணீர் விட்டான். அரக்க அரசனுடைய வாயினின்று புகையும் நெருப்புமாக மூச்சு வெளி வந்தது.

"ஐயோ! என் அருமைக் குழந்தாய்! ஒப்பற்ற வீரனே! மகேந்திரனை வென்ற சூரனே! யமன் வெற்றியடைந்து விட்டானா! நீ வீரசுவர்க்கம் அடைந்து விட்டாய். நான் துக்கப் படலாகாது!" என்றான்.

"இந்திரஜித்து மாண்டானா! உலகம் எனக்கு சூன்யமாகிப் போய் விட்டது" என்றான் மறுபடியும்.

"மந்தோதரியையும் உன் பிரிய மனைவியையும் என்னையும் விட்டுப் போய் விட்டாயே! உன் பிரதிக்ஞையை நிறைவேற்றாமலும், பழி தீர்க்காமலும் எங்களை விட்டுப் போய் விட்டாயே!" என்று கதறினான்.

"இந்த விபத்துக்களுக்கெல்லாம் காரணமான ஜானகியைக் கொன்று விடுவதே நலம். என் குமாரன் மாயை செய்து சீதையைக் கொன்றதாகக் காட்டினான், இன்று உண்மை சீதையையே நான் வெட்டிக் கொல்லப் போகிறேன்" என்று கத்தி எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

சில மூர்க்க அரக்கர்கள் ராவணன் கோபமாகப் புறப்பட்டதைக் கண்டு சந்தோஷ ஆரவாரம் செய்தார்கள். ஆனால் சுபார்சவன் என்ற மந்திரி ராவணனைத் தடுத்தான்.

"மகராஜனே! என்ன செய்யத் துணிந்தீர்! என்ன காரியம் செய்யப் போகிறீர்!

# செப்டம்பர் 11ம் இதழிலிருந்து
# சுகிசிவம்
## எழுதும்
## எழுச்சித் தொடர் ஆரம்பம்!



தசக்ரீவா! குபேரனுடைய தம்பியாகிய நீர் ஒரு பெண்ணைக் கொன்று, அந்த அவமானத்தையும் தோஷத்தையுமா சம்பாதிக்கப் போகிறீர்? கோபத்தை இவ்விதத்திலா போக்க விடுவது? வேதங்களை ஓதி சகல வித்தையும் கற்று விரதம் அனுசரித்த நீர் இப்படிச் செய்யலாகாது. உமக்கு நிகர் யார்? யுத்தத்தில் உம்மை எதிர்ப்பவர்கள் யார்? யுத்தத்தில் வென்று சீதையை கிரமமாக அடைவீர். சந்தேகமில்லை. ராமன் பேரில் கோபத்தைச் செலுத்துவோம். இன்று சதுர்தசி. இரவு கழிந்தால் நாளை அமாவாசை. எல்லா பலத்தையும் கொண்டு லங்கையிலிருந்து புறப்பட்டு ராம லக்ஷ்மணர்களை வதம் செய்து வெற்றி பெறுவீர். பிறகு சீதையை அடைவீர். பிரம்மாவிடமிருந்து பெற்றிருக்கும் கவசத்தைத் தரித்து ரதம் ஏறிக் கிளம்புவீராக!" என்றான்.

சுபார்சவன் சொன்னதே ஹிதமென்று ராவணனும் ஒப்புக் கொண்டான்.

சிம்மாசனத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு கொஞ்ச நேரம் பேசாமல் யோசனையில் ஆழ்ந்த வண்ணமாக இருந்தான். பிறகு சேனைத் தலைவர்களுக்குக் கை கூட்டி, "நீங்கள் சகல பலத்துடனும் உடனே சென்று இந்த ராமனை வதம் செய்யுங்கள். உங்களால் முடியா விட்டால் நானே சென்று அவனை ஹதம் செய்வேன்" என்றான்.

**ம**லைகளைப் போன்ற ரதங்களிலும் யானைகள், குதிரைகள் ஏறியும் ராக்ஷச சேனை முழு பலத்துடன் யுத்தத்திற்குப் புறப்பட்டது.

வானரர்கள் கற்பாறைகளையும் மரங்களையும் பிடுங்கி எடுத்து ராக்ஷசர்களை பலமாகத் தாக்கினார்கள். ராக்ஷசர்களும் வானரப் படையை பலமாகத் தாக்கினார்கள். ரத்த வெள்ளம் ஆறாகப் பெருகிற்று. வானரர்கள் தாவித் தாவி அரக்கர்களையும் அவர்கள் ரதங்களையும் வாகனங்களையும் ஆயுதங்களையும் ஒடித்தும் அறுத்தும் கிழித்தும் துவம்சம் செய்தார்கள். ஒவ்வொரு ராக்ஷசனையும் அநேக வானரர்கள் சூழ்ந்து கொண்டு கொன்றார்கள்.

ராக்ஷசர்களும் வானரர்களைச் சும்மா விடவில்லை. பலமாகத் தாக்கிப் பதினாயிரக் கணக்கில் கொன்றார்கள்.

**ரா**மன் தன் வில்லை வளைத்து அரக்கர்கள் பேரில் சரமாரி பொழிந்தான். நெருப்பைப் போல் ராக்ஷச சேனையை அவன் பாணங்கள் எரித்தன. தங்களுடைய சகாக்கள் விழுந்து மடிவதைத்தான் கண்டார்கள்; அம்பு மழையில் ராமனை அவர்கள் காணவில்லை. அநேக ராமன்களைக் கண்டார்கள். எங்கும் அவனைக் கண்டார்கள். எண்ணற்ற ராக்ஷசர்கள் மாண்டார்கள். எண்ணற்ற யானைகளும் குதிரைகளும் மடிந்தன. ரதங்கள் ஒடிந்தன. அரக்கர் சேனை அழிந்தது, எஞ்சினவர்கள் சிதறி ஓடினார்கள். தேவர்களும் கந்தர்வர்களும் சித்தர்களும் ராமனைக் கொண்டாடினார்கள். லங்கையில் ராக்ஷஸ ஸ்திரீகள் ஒருவரையொருவர் கட்டிக் கொண்டு பெரும் கூக்குரலிட்டு பிரலாபித்தார்கள். ராவணனுடைய அறிவீனத்தால் இப்படி ஆயிற்றே என்று அழுதார்கள்.

(தொடரும்)

● த. குமார், பழனி.

? "உலகத் தமிழ் மாநாடு நடத்துவதன் மூலம் முதல்வர் 'ஜெ' புகழ் உலகம் முழுவதும் பரவும்" என்கிறாரே, அவ்வை நடராஜன்?

! அவருக்கு அனுபவம் போதாது; இல்லையென்றால், 'ஜெ' புகழ் உலகெங்கும் பரவியிருப்பது போல் மாநாட்டுக்குப் பிறகு தமிழின் புகழும் உலகெங்கும் பரவும்" என்று பேசியிருப்பார்!

● அன்பு கதிரேசன், கீழ்க்கட்டளை.

? மேமோன் கைது செய்யப்பட்டது ஒரு வெற்றிதானே?

! மிகப் பெரிய வெற்றி. அவனுடைய வாக்குமூலங்கள் மூலம் பாகிஸ்தானின் 'பரம சாது' நாடகம் தவிடுபொடி. அது எப்படி புது தில்லி ரயில்வே ஸ்டேஷனுக்கு வருவான்



• கைது!

# மேமோன் கைது ஒரு வெற்றிதானே?

என்று காத்திருந்து 'கப்'பென்று பிடித்தார்கள்! "கை கொடுங்க ஸார்" என்று ஸி.பி.ஐ. அதிகாரிகளிடம் சொல்லத் தோன்றுகிறது. யாகூப் மேமோனின் கைது, நாளை தாவூத் கைதாவதற்கும் வழிவகுக்கக்கூடும். அதே சமயம் தனது அண்ணன் டைகர் மேமோன் பாகிஸ்தான் அதிகாரிகளுடன் சேர்ந்து சதி பண்ணக் காரணம் என்ன என்பதையும் யாகூப் மேமோன் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. ஆரம்பம் பாபர் மசூதி இடிப்பு; அதையொட்டி பம்பாயில் ஜனவரி கலவரங்கள். இவற்றுக்குப் பழிவாங்கலாம் என்று கூறித்தான் டைகரை ஆசைகாட்டி பாகிஸ்தானிய அதிகாரிகள் வசப்படுத்தி இருக்கிறார்கள். ஆக, இதில் நம் எல்லோருக்குமே ஒரு பாடம் இருக்கிறது. அது - கூடி வாழ்ந்தால் கோடி நன்மை என்பதுதான்.

● பி. சிவகுமார், வலங்கைமான்.

? காவிரி ஒப்பந்தம் பற்றி ஆர்.வி. தெரிவித்துள்ள கருத்துக்களை கருணாநிதி கடுமையாக எதிர்த்திருக்கிறாரே?

! அவர் தாமாக எதையும் கூறவில்லை. குகன் முதலில் கண்டுபிடித்துக் கூறியதைக் கடன் வாங்கிக் கொண்டு பிரமாதப்படுத்தி ஒரு கலக்குக் கலக்கினார். ஆனால் ஆர்.வி. அது தமது கருத்து அல்ல என்றும் கர்நாடக மாநில அரசின் கருத்து என்ன என்பதுதான் நூலின் குறிப்பிட்ட பகுதியில் எழுதப்பட்டிருக்கிறது என்றும் தெளிவுபடுத்தியதுடன், எதற்கும் சந்தேகம் வேண்டாம் என்று ஆட்சேபணையை ஏற்று திருத்தமும் வெளியிட்டுவிட்டாரே!

● இரா. முத்துக்குமரன், தோழகிரிப்பட்டி.

? நடிகர் திலகம், "செவாலியர்" பட்டம் பெற்றிருப்பது பற்றி...?

! ஒரு செவாலியருக்கு உரிய உயர்ந்த சிந்தனைகள், செயல்பாடுகள் நம்து ஆட்சியாளரிடம் இல்லை. இருந்திருந்தால் பிறநாடுகள் வழிகாட்ட அவசியமின்றி இந்தியாவே முந்திக் கொண்டு சிவாஜியை உரிய முறையில் கௌரவித்திருக்கும்.

● உ.ர. சங்கர், திருச்சி.

? நகர எல்லைக்குள் ஏர் ஹாரன் அடிக்கக் கூடாது என்ற சாதாரண விதிமுறையைக் கூட நம் டிரைவர்கள் பின்பற்றுவதில்லையே, ஏன்?

! ஏனென்றால் அவர்களை போலீஸார் தட்டிக் கேட்பதில்லை; ஏனென்றால் தட்டிக் கேட்க திராணியில்லை; ஏனென்றால் அவர்கள் கரங்கள் கறைபடிந்திருக்கின்றன. ஏனென்றால் ஆட்சியில் உள்ளோர் வழி காட்டுகிறார்கள்!

● சுப. அண்ணாமலை, நாகணம்பட்டி. ❑

? மீண்டும் ஆயிரம் ரூபாய் நோட்டு அச்



• செவாலியர்!



• மணி விழா!

சடிக்கப் போகிறார்களாமே?

! அதனால் சூட்கேஸின் எடை குறைந்து விடாது, ரேட்தான் ஏறும்!

● மா. பழனிசாமி, கோவை.

? இந்திய டாக்டர்களின் புதிய சாதனையில் தங்களைக் கவர்ந்தது எது?

! டில்லி, அகில இந்திய மருத்துவ விஞ்ஞானக் கழக ஆஸ்பத்திரியில் டாக்டர் வேணுகோபால் வெற்றிகரமாக நடத்தியுள்ள இருதய மாற்று ஆபரேஷன்தான். ஒரு பெண்ணின் இதய தானத்துக்கு ஒப்புக் கொண்ட அவளது உறவினர்களை நாடாளுமன்றமே பாராட்டியுள்ளது. உறுப்புகள் தானத்துக்கு நம் மக்கள் தங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டியதையும் இதற்கு அனுசரணையாகத் தேவையான சட்டங்கள் இயற்றப்பட வேண்டியதையும் இந்த நிகழ்ச்சி வலியுறுத்துகிறது.





• முத்தையா விருது! • அனுபவம் போதாது!

● முத்துவேணி அரசு, பாம்பன்குளம்.

? இந்த ஆட்சியில் திராவிட பாரம்பரியம் மேலோங்கியுள்ளதா அல்லது பார்ப்பனிய கலாசாரம் மேலோங்கியுள்ளதா?

! இரண்டுமில்லை; ஊழல் பாரம்பரியமும் லஞ்சக் கலாசாரமும்தான் மேலோங்கியுள்ளன.

● தி. சுரேஷ், காரைக்குடி.

? மணிவிழா காணும் மணியன் பற்றி...?

! விகடனை விட்டுப் பிரிந்து வந்த பிறகு, 'முன்னேறிக் காட்டுகிறேன் பார்' என்று ஒரு சவால் விட்டது போல் முன்னேறியவர். வெற்றிகளைச் சந்தித்துக் கைகுலுக்கியது போல் சில தோல்விகளையும் கலங்காது ஏற்றவர். 'தட்டுங்கள் திறக்கப்படும்; கேளுங்கள் கொடுக்கப்படும்' என்பதைப் புரிந்து கொண்டு செயல்பட்டு பலரது ஒத்துழைப்பைப் பெற்றவர். திரைப்படங்களில் 'சொல்லத்தான் நினைக்கிறேன்', பத்திரிகைகளில் 'ஞான பூமி' ஆகியன என்றும் அவர் பெயர் சொல்லும். அவரது ஏராள பயண நூல்கள் 'உலகை அவர் சுற்றி வருகிறாரா? அல்லது உலகம் அவரைச் சுற்றுகிறதா?' என்ற ஐயப்பாட்டைக் கூட எழுப்பும்!





• கருத்துக்கு.... • ...எதிர்ப்பு!

● கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

? சிரிப்பாய் சிரிக்க ஒரு சின்ன சம்பவம்?

! இளைஞர் காங்கிரஸ் தலைவர் பிட்டாவைச் சந்திக்க விமான நிலையம் சென்ற தமிழக இளைஞர் காங்கிரஸ்காரர்கள், விமான நிலைய கண்ணாடிக் கதவுகளை அடித்து நொறுக்கியது. அ.தி.மு.க. மாணவரணி, பஸ்களை நொறுக்கியதற்குப் போட்டி போலும்! மன்னிப்புக் கோரினால் போதாது, வாழப்பாடி ஸார், பண்பாடு வகுப்பு நடத்துங்கள்!

● முகமது மீரான், சென்னை.

? தமிழறிஞர் டாக்டர் சுப்புரெட்டியாருக்கு ராஜாசர் முத்தையா செட்டியார் விருது வழங்கப்பட்டது குறித்து?

! தகுதியுள்ளவர்களை மிக மிக கவனமாகத் தேர்ந்தெடுப்பதால் இந்த விருதுக்கு மிகுந்த மதிப்பு உண்டு. 103 நூல்களை எழுதியுள்ள சுப்பு ரெட்டியார் இந்த விருதைப் பெற சகல விதங்களிலும் தகுந்தவர். பண்டைத் தமிழ் இலக்கியங்களின் நயங்களை மட்டுமின்றி கடினமான ஆன்மீக நூல்களுக்கு விளக்கங்களும் விரிவுரைகளும் எழுதியவர். அத்துடன் பிள்ளைப் பேறு முதல் விண்வெளிப் பயணம் வரை பல விஞ்ஞான நூல்களைத் தமிழில் தந்தவர். இப்படி பலதுறை நூல்களை ஆழ்ந்த புலமையுடன் எழுதியவர் வேறு ஒருவர் உண்டா என்பது சந்தேகமே. லால்குடி வட்டாரத்தினர் காலரைத் தூக்கி விட்டுக் கொள்ளலாம். சுப்புரெட்டியார் அங்கே பெரகம்பி கிராமத்தில் பிறந்தவர்! ஒரு சோகம் : புத்தகங்கள் தேங்கிக் கிடப்பதாக அவரே வருந்துவதுதான்!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
சுப. அண்ணாமலை,
நாகணம்பட்டி,
ஒட்டன்சத்திரம் (அ),
திண்டுக்கல் - அண்ணா- 624 619.

# வட்ட மேஜை

## கலையும் கமர்ஷியலும் கலந்த சிறப்பிதழ்!

♦ "காவல் துறையின் மானம் கப்பலேறுகிறது" தலையங்கம் படித்தேன். போலீஸ் இலாகாவை எப்படிப் பயன்படுத்திக் கொள்வது என்ற வரைமுறை சுத்தமாக யாருக்கும் இங்கே தெரியாததால் வந்த வினை தான், இப்பொழுது நாம் அனுபவித்துக் கொண்டிருப்பது. என்னதான் நாம் புலம்பித் தீர்த்தாலும், போலீஸாரின் எண்ணத்தில் மாற்றம் ஏற்பட வேண்டும். சேவை மனப்பான்மை அடிப்படையில் உருவாக வேண்டும். அதுவரை போலீஸ்காரர்களின் அட்டூழியங்கள் தொடரத்தான் செய்யும்!

மொரட்டுப் பாளையம், கு.நா. இராஜேஸ்வரன்.

♦ அப்பப்பப்பா... தலையங்கத்தில் காவல் துறையை இந்த வாங்கு வாங்கி விட்டீரே! எதற்கும் உம்முடைய இரத்த அழுத்தத்தைச் சோதித்துக் கொள்ளும்!

சேத்துப்பட்டு, வி.பி.கே.

♦ அழுக்கு அரைடிரவுசர் அழகுவின் கோர மரணம் மனசை பிழிந்தெடுக்கிறது! கல்லே.. கல்லே.வேர்க்கல்லே.. குரல் செவிகளில் இன்னும் ஒலிக்கிறது. முதல் பரிசுக் கதாசிரியருக்கு மன மார்ந்த பாராட்டுக்கள்.

ஸ்ரீரங்கம், ஆர்.கோபாலன்.

♦ சென்ஸார் செய்யப்படத் தேவையில்லாத புகைப்படங்களுடன், ஒரு சினிமா சிறப்பிதழ் 'கல்கி'யால் மட்டுமே தரமுடியும்.

கள்ளிப்பாடி, கே. ஸ்டாலின்.

♦ கலையும் கமர்ஷியலும் கலந்து தயாரிக்கப்படுகின்ற பாலுமகேந்திராவின் படமொன்றை திருப்தியுடன் பார்த்த நிறைவையளித்தது சினிமா சிறப்பிதழ்.

தக்கலை, லீலா இராம்.

♦ தான் ஹார்ட் அட்டாக்கால் பாதிக்கப்பட்டு சிகிச்சை பெற்றுக் கொண்டிருக்கும் நிலையிலும் டாக்டர், "உங்களுக்கு என்ன வயது?" என்று கேட்டதற்கு, பாலசந்தர் twice twenty-one என்று நகைச்சுவையாகப் பேசியதைப் படித்து வியந்தேன்.

மணியக்காரன் பாளையம், ஏ.ஜி.கல்யாணசுந்தரம்.

♦ 'நினைத்தாலே இனிக்கும்' அளவு திரையில் 'வெள்ளி விழா' கொண்டாடிய 'காவியத் தலைவனி'ன், 'நினைவலைகள்' ஆரம்பமே எங்களின் 'தாமரை நெஞ்சங்'களில் சந்தோஷத்தை அள்ளித் தந்து இருக்கின்றது.

வியாசர் காலனி, திருமதி. நாராயண ராவ்.

♦ 'கதைகளே சூப்பர் ஸ்டார்கள்' என்ற எஸ்.எஸ். மணியின் கட்டுரையை, கதையை நம்பிப் படமெடுக்கும் நம்மூர் உப்புமா டைரக்டர்கள் அவசியம் படிக்க வேண்டும்.

மதுரை, வி.பி. மகராசி.

♦ நம்மையே கங்கைக் கரைக்குக் கூட்டிப் போய் விட்டார் பாலகுமாரன்!

திருச்சி, எச். சபிதாநேசன்.

♦ இந்திப் பட உலகில் நேபாளத்தின் ஆட்சி பற்றி சொன்ன கையோடு, தமிழ்ப்பட உலகில் இந்தி நடிகைகளின் ஆட்சி பற்றியும் சொல்லியிருக்கலாம்.

குமரி, இரணியல் கலை.

♦ சினிமா சிறப்பிதழ் என்று கூறி விட்டு ஒரு திரைப்பட விமர்சனம் கூட வெளியிடாதது என்னங்க நியாயம்?

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

♦ யாரது....ம்..மோனாலிசா...ம்ஹூம்...மர்லின் மன்ரோ...இல்லையே... அட, நம்ம மனிஷா கொய்ராலா... அட்டை சூப்பருங்கோ!

ஏத்தாப்பூர், காம்னிப்ரியன்

♦ கே.ரவிசங்கரின் 'வெள்ளிச் சிறை' என் இதயச்சிறையை விட்டு அகலவே அகலாது!

மதுரை, பி. ராஜா.

♦ 'மனிஷா கொய்ராலா, அண்மையில் பதவி விலகிய நேபாளப் பிரதமரின் ஒரே மகள்...' என்று பேட்டிக் கட்டுரையில் வெளியிட்டிருந்தீர்கள். மனிஷா, முன்னாள் பிரதமர் B.P. கொய்ராலாவின் மகன். B.P கொய்ராலாவின் சகோதரர்தான் சமீபத்தில் ராஜினாமா செய்த கிரிஜா பிரசாத் கொய்ராலா.

சென்னை-61, கு.ச.சேகர்.


பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097, தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.



# பார்க் டவுன்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம். துவக்கம் 1985 Post Box No: 2806
223, தங்க சாலை, (கந்த கோட்டம் அருகில்) பார்க் டவுன், சென்னை-3 போன்: 582676, 564354.
கிளை: 2 கிழக்கு மாடவீதி, திருவான்மியூர், சென்னை-41 போன் 413582



### பிக்சட் டெபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு* |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

### 5 வருடங்கள்

**21%** ரூ. 50,000/- அதற்கு மேலும்

### PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும் தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

| ரொக்கப் பத்திரங்கள் | தொகை | பத்திரங்கள் மதிப்பு | தொகை | பத்திரங்கள் மதிப்பு |
|---|---|---|---|---|
| 36 மாதங்கள் | Rs.2,925/-<br>Rs.5,850/- | Rs.5,000/-<br>Rs.10,000/- | Rs.8,775/-<br>Rs.11,700/- | Rs.15,000/-<br>Rs.20,000/- |

### வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்

### காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |
| Rs.25,280 | Rs.24,000 | Rs.24,000 | Rs.2,25,280 |

### கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/-
முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில்
ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு
முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

### செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | | Rs.1,50,000 |

### பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

### மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |
| Rs.7,500 | Rs.8,880 | Rs.10,725 | Rs.15,000 | Rs.19,010 |

பென்ஷனர் நலத்திட்டம்
20 % P.a.
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**சேமிப்பு திட்டம்**
**10% P.a.**

தங்க நகை கடன்
Rs. 3,000 PER 10 GRAM
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

கௌரவ ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

ஒவ்வொரு மாத வட்டிக்கான காசோலை மொத்தமாக டெபாசிட் செய்யும்பொழுதே வழங்கப்படும்.
* தனயோகம் டிபாசிட் திட்டம் 20% குறைந்த அளவு ரூ.20,000 டிபாசிட் காலம் 5 ஆண்டுகள்

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❒ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❒ வெள்ளி விடுமுறை

SURESH

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

உங்கள் மனதைக் கவர்ந்த

"மென்மை...மென்மை... ராகா... ராகா..."

இப்பொழுது ஒரு புதிய வடிவத்தில்

# ராகா ரீபில் பேக்




சேமியுங்கள்

ரூ. 4/-




**ராகா - சீயக்காய்**

உங்கள் எண்ணெய் குளியலை எளிமையாக்கி, கேசத்திற்கு இயற்கையான ஊட்டமளித்து மேலும் மென்மையாக்குகிறது.

**ராகா - செம்பருத்தி**

உங்கள் உடலுக்குக் குளிர்ச்சி தந்து, கேசத்திற்குக் கருமை தந்து கூந்தல் வளர்ச்சிக்கும் உதவுகிறது.



ராகா ஹெர்பல் பவுடர், சீயக்காய், செம்பருத்தி மற்றும் பல அரிய மூலிகைகளின் நற்குணங்களைக் கொண்ட ராகா இப்பொழுது வித்தியாசமான ஒரு ரீபில் பேக்கில் கிடைக்கிறது.



**Raaga**

**Herbal powder**

* ரீபில் பேக் தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம் மற்றும் கர்நாடகாவில் மட்டும் கிடைக்கிறது. ரீபில்பேக்கின் விலை கன்டெய்னரை விட ரூ.4/- குறைவு.

PROFAD:NCPL-TAM:945:94